உ

கணபதி துணை.

# சூரைமாநகர்ப் புராணம்.

திருவாவடுதுறை

ஆதீனத்து மஹாவித்துவான்

திரிசிரபுரம்

## ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்

இயற்றியது.



---

இது,

காரைக்குடி,

மு.ரு.ஸ்ரீ லெ. இலக்குமணச்செட்டியாரவர்களுடைய

குடும்பஸ்தர்களின் பொருளுதவியைக்கொண்டு,

இந்நூலாசிரியர் மாணாக்கரும்

சென்னைப் பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய

உத்தமதானபுரம்

## வே. சாமிநாதையரால்

நூதனமாக எழுதிய அரும்பதவுரையுடன்

சென்னை:

பிரஸிடென்ஸி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

---

குரோதி௵ ஆனி௴

1904

உ

கணபதி துணை.

# முகவுரை.

சூரைமாநகரென்பது, பாண்டியவளநாட்டில், கிழக்கே விரவனத்தையும், தெற்கே கோயிலூரையும், மேற்கே மயூரகிரியையும், வடக்கே திருமெய்யத்தையும் ஐவைந்து நாழிகைவழித் தூரத்தில் எல்லைகளாகப்பெற்று இவற்றினிடையே விளங்குவதொரு புராதன சிவஸ்தலம்; இது சூரைக்குடி, சூரை, விசயாலயபுரமெனவும் வழங்கும்.

ஸ்தலவிநாயகமூர்த்திகள் இருவர்: (க) காட்சிவிநாயகர், (உ) சுந்தரவிநாயகர்.

ஸ்வாமியின் திருநாமங்கள்: சங்கரநாதர், சுந்தரேசரென்பன.

அம்பிகையின் திருநாமங்கள்: பார்வதி=பாங்பதி, மீனாக்ஷி=கயற்கணம்மையென்பன.

தீர்த்தங்கள்மூன்று: (க) சூரியதீர்த்தம், (உ) பொற்றாமரை, (ங) விஷ்ணுதீர்த்தம்.

ஸ்தலவிருக்ஷம் இரண்டு: (க) இலந்தை, (உ) கடம்பு.

வழிபட்டுப்பேறுபெற்றோர்கள்: சூரியன், சூரன், பொன்னனென்கிற சயாலயதேவன், சங்கப்புலவர்கள், திருமாலென்பவர்கள்.

இதைச்சார்ந்துள்ள சுப்பிரமணியஸ்தலங்கள் நான்கு: (க) திருவேலன்குடி, (உ) பலவானவர்குடி, (ங) ஆலத்திப்பட்டி, (ச) மலையிட்டான்.

மேற்கூறிய விசேடங்களையுடையதும், மிகப் பழமையானதுமாகிய இந்தச் சூரைமாநகரின் புராணத்தை வடமொழிமுதனூலினின்றும்மொழிபெயர்த்துத் தமிழில் இனியசெய்யுணடையாக இயற்றியவர்கள், கவிஞர்பெருமானும் திருவாவடுதுறை ஆதீனத்து மஹாவித்துவானுமாகிய திரிசிரபுரம் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்.

இந்நூலை அக்காலத்தில் ஆக்குவித்த பிரபு, கானாடுகாத்தான் முரு. லெ. இலக்குமணச்செட்டியாரவர்களுடைய புத்திரரும் பெருங்கொ

# முகவுரை.

[illegible]யாளியென்று மிக்க புகழ்பெற்றுவிளங்கியவருமான கிருஷ்ண செட்டியாரவர்கள் ; இவர்கள் பெருமையும் இவர்கள் இந்நூல் செய்வித்தமையும் இந்நூற் கடவுள் வாழ்த்தின் பின்புள்ள செய்யுட்களான் நன்குபுலப்படும்.

இப்புராணம், முதலில் காட்சிவிநாயகர் துதிமுதலியன அடங்கிய கடவுள்வாழ்த்தும், அவையடக்கமுதலியனவும் அமையப்பெற்றுப் பின்னர்த் திருநாட்டுப்படலமுதலிய பத்துப் படலவுறுப்புக்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. இதன்செய்யுட்டொகை ருகூ.

நூலாசிரியர்பெயரைக்கேட்கவே செய்யுள்நடையும், பொருளமைதியும், சிலேடைக்கருஷங்களும், சில்லவுறுதிகளும், கற்பனை முதலியனவும், மிகச் செவ்வையாக அமைந்திருக்குமென்பது, இக்காலத்தில் தமிழ்நாட்டிலுள்ள விவேகிகள் யாவருக்கும் நன்குபுலப்பட்டவிஷயமாதலால், யான் அவற்றைப்பற்றி யாதொன்றும் எழுதத்துணிந்தேனில்லை.

இந்நூலைப்பதிப்பித்தலில் எனக்குப் பொருட்கவலையில்லாதிருக்கும்படி முயன்றவர்களும் கல்வியறிவொழுக்கங்களாற் சிறந்து விளங்குபவர்களுமாகிய காரைக்குடி அறுபத்துமூவர்மடம் ம-ள-ள-ஸ்ரீ ராம. சொ. சொக்கலிங்கச்செட்டியாரவர்களுடைய பெருந்தகைமை மிகப் பாராட்டற்பாலது.

இங்ஙனம் ஆதரிப்போர் சிலரேனுமிருப்பின் மகோபகாரிகளாகிய பிள்ளையவர்களியற்றிய இனியநூல்கள் பலவற்றுள் இதுவரையில் அச்சிடப்படாமலிருப்பனவற்றைப் பதிப்பித்து யாவரும் எளிதிற்பெறும்படி வெளிப்படுத்துதற்கு மிக அனுகூலமாக இருக்கும். திருவருள் துணைசெய்யவேண்டும்.

இங்ஙனம்
வே. சாமிநாதையன்.

---

# சூசிபத்திரம்.

உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# கூழைமாநகர்ப் புராணம்.

## கடவுள் வாழ்த்து.

### காட்சி விநாயகர்.

பூமேவு செந்தமிழாஞ் சகர்மொழி யிரண்டுமொன்று போன் றோர் தூணி, ஞமேவு வகையுதித்த மடங்கல்பிறப் பிடத்திழிபு நாடி நாண, வோமேவு குஞ்சரமு மப்பிடியுங் கலப்பவுதித் துலகமெல் லாந, தாமேவு விதம்பொலியுங் காட்சிமால் களிற்றினிரு சரணஞ் சார்வாம். (க)

### சங்கர விநாயகர்.

மருவுபெரும் போகமெலா மொருங்கடைவான் பூசைபுரி மாண்பு வாய்த்தோர், திருவுதர மளவிற்றோ சுருங்கிற்றோ வென்று விழி செலுத்தா தாற்றப், பொருவுதவிர் பேருதரத் தொடும்பொலிந்து நாற்பயனும் புவனத் தியார்க்கும், வெருவுதவிர்த் தருளுமொரு சங் கரமால் களிற்றினடி மேவி வாழ்வாம். (உ)

### சுந்தரேசர்.

பொன்பூத்த தாமரையிற் குடியானு நெடியானும் போற்றி யேத்த, வின்பூத்த கரிபடையாக் கடம்பினடி வசிப்பதினு மேற்ற மிக, மன்பூத்த நாற்பயனும் வழங்கிநறுங் கனிதூவும் வதரி நீழற், கொன்பூத்த பொலிவினமர் சுந்தரே சுரர்மலர்த்தாள் குறித்து வாழ் வாம். (ங)

### கயற்கணம்மை. வேறு.

மயிற்க ணம்மையும் வீழ்ந்துழ லேதுவாம் வழிச்செலீஇ மா ழுகிந்து, செயற்க ணம்மைசிற் றுயினு மருவகை செய்தெனவ வெ னும்வாயிற், பெயற்க ணம்மைய மெடுத்தினி தாண்டவள் பேர ருட்பெருமாட்டி, கயற்க ணம்மைபொற் பாததா மரைமலர் கருத் திருத் துபுவாழ்வாம். (ச)

சபாநாயகர். வேறு.

சடையமர் மடந்தை லாளும் புயத்தமர் தரும ராவு
மிடையமர் புலியு மாட விடத்தமர் மடந்தை லாளும்
புடையம ரராவு மற்றைப் புலியுங்கண் டுவப்ப வேதத்
தொடையமர் மன்று ளாடுஞ் சோதிதாட் கன்பு செய்வாம். (௫)

சிவகாமியம்மை.

கருங்கடல் கடுக்கு மேனிக் கர்குத்தன் முதலா வுள்ள
பெருங்கட வுளரு மேனைப் பசுக்களும் பிறவிப் பாச
மொருங்கட விப்ப மேவ வும்பர்நா யகன்செய் கூத்தா
மருங்கட லமுத நோக்கா லள்ளியுண் பவடாள் போற்றி. (௬)

தக்ஷிணாமூர்த்தி.

உணர்த்துத லுணர்த லென்ன வுரைசெயோ ரிரண்ட னுள்ளு
முணர்த்துத றனதே மற்றை யுதுபசு வினதே யென்ப
துணர்த்திட வொருநால் வர்க்கு மொருகல்லா னீழல் வைகி
யுணர்த்திய வருள்சான் முற்று முணர்ந்தவர்க் கன்பு செய்வாம். (எ)

வைரவக்கடவுள்.

விதித்திடு தொழிலி னானுங் காத்திடு விறலி னானுந்
துதித்திடு முதலி யாமன் முதலியா மெனத்துள் ளார்கள்
பதித்திடு கபாலத் தோடு படர்பெருஞ் சூலந் தாங்கித்
திதித்திடு வடுகப் புத்தேள் சேவடி சென்னி சேர்ப்பாம். (அ)

காட்சி விநாயகர்.

குலமறை யெடுத்துக் கூறுங் குறிகுணங் கடந்து மேலோர்
வலமுறக் கருத லாய மானமுங் கடந்தி யாரு
நிலவுநாற் பயனு மெய்த நிறைந்தொளிர் மதியக் கீற்றுக்
கிலமுடிக் கருணைக் காட்சிக் களிற்றினைக் கருத்துள் வைப்பாம். (௯)

முருகக்கடவுள்.

தரைபுக லெழுத்தே யீற்றிற் சார்தர வொருவாய் பாட்டி
னுரையமை படையுந் தெய்வ வூர்தியுங் கொடியுந் தாங்கி
வரைமுதற் பகைகள் மாய்த்து மன்னுயி ரனைத்துங் காக்கும்
விரைகெழு கடப்பந் தண்டார் வித்தகற் கடிமை செய்வாம். (௧0)

திருநந்திதேவர்.

மன்னிரி கரவில் பூண்டு மறைமுடிப் பெருமான் சேவை
முன்னிவு புறத்தி னல்கி முழுப்பெருங் குரவு பூண்டு

துன்னிய வகத்து நல்கிச் சூரன்முத் திரையுந் தாங்கு
மின்னிய செங்கை யண்ணல் விரைமலர்ப் பாதம் போற்றி. (௧௧)

அகத்தியமுனிவர்.

அறவினை யாதெ னிற்கொல் லாமையென் பதற்கூ மாறு
மறவினை புரிவா தாவி வில்வல னுயிரை மாட்டி
யறவினை கோற லானு மமையுமென் றகிலந் தேற்றி
மறவினை கடிந்த தெய்வ முனிவனை வணக்கஞ் செய்வாம். (௧௨)

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்.

ஆணெனப் பட்ட பெண்ணை யடங்கலும் பெண்ணே யாக, மாணெனச் சமைத்தா னென்றும் பெண்ணென்றும் வழங்கா வெ ன்பு, நாணெனப் பொலிபெண் ணுகப் பாடிய நாவ லோன் பொன், வீணெனப் பொலியும் பூந்தாள் விடாதுளத் திருத்து வாமே. (௧௩)

திருநாவுக்கரசுநாயனர். வேறு.

கொண்ட விரதங் குலேத்தவர்கள் யாரும் பாவக் குழிசியாய்க்
கண்ட பிறப்பெல் லாந்துளேந்து கவன்று வருந்திக் கடையாகக்
கொண்ட விரதங் குலேத்தளவாச் சிவபுண் ணியக்கொள் கலமாகிக்
கண்ட பவங்கள் களேந்துமுத லானுர் கழலுட் கருதிடுவாம். (௧௪)

சுந்தரமூர்த்திநாயனர்.

ஓங்கு பலநாள் விடாதுதொடர்ந் துண்டை செலுத்திக் கூனி மிர்த்த, வாங்கு சிலேக்கை யிராமனுள மாழாந் தகலா நாணடையக், கோங்கு முலேமா தொருத்திபுறஞ் சிறிது நோக்கிக் கூனிமிர்த்த, வீங்கு புனல்சூழ் நாவலூர்ப் பெருமான் பாதம் விழைந்திடுப்பாம்.

திருவாதவூரர். வேறு.

ஆக்குவித் தோனுஞ் செய்யு ளணியுடைத் தலைவன் ருனுந்
தூக்குமுற் றெழுது வோனுஞ் சொற்பொருள் விரிக்கின் ருனுந்
தேக்குபன் மறைக ளானுந் தெளிதரா வொருவனையா
பாக்குவாய் மலரும் வாத வூரர்தாள் பரசி வாழ்வாம். (௧௫)

சண்டேசுரநாயனர். வேறு.

நிரம்புநூற் கேள்வியி னிகழ்த னக்குமாக்
திரம்பிதா வாயினற் சினந்து தீர்ந்தொரி இ
வரம்பில்பல் லுயிர்க்கெலாம் பிதாம ருங்கின்
தரம்புகப் புகுந்தசேய் சரண்புக் குய்துமே. (௧௬)

அறுபத்துமூவர். வேறு.

ஆளவி றீமை யமைந்தவென் னுள்ளத்து
மளவில் பேரரு ளாலவை மாற்றியே
யளவில் சீர்த்தி யறுபத்து மூவரு
ளெவில் காதலி னூரு மமர்வரே. (கஅ)

பஞ்சாக்கரதேசிகர். வேறு.

ஒருமல வலியு மிருவினைச் செயலு மூவகை மாயையி னுறைப்பு, மருவுநாற் கதியு மைந்தவத் தைகளும் வயம்படு மறுவகைத் திறனும், வெருவெழு பிறப்பு மாவிடு துறையின் மேவிய குருநமச் சிவாய, னிருமல ரடிசா ரடியவ ரடையா ரேனைய ரெனையரோ வறியேம். (கசு)

அம்பலவாணதேசிகர்.

அம்பல வாண தேவனே டமர்வுற் றுவடு துறையிடத் தருள்கூர்
நம்பல மான நமச்சிவா யன்கா ணலமலி சுப்பிர மணிய
வும்பனே டமர்வுற் றருணனி கொழிக்கு முத்தம னம்பல வாணன்
செம்பது மத்தா ளவுன்றரும் யாமே சிறியோ மேனையர் யாரோ. ()

மற்றைச்சிவநேசர்கள்.

சூளாமா நகரிற் றலங்கவீற் றிருக்குஞ் சுந்தரேசுரன் றனைத் தெழுந்து, வாளையா தரிக்குங் குவிமுலைக் கயற்கண் மடந்தைமற் றிவர்பணி புரிவோர், பாளைமேம் படுக்குஞ் சிவாலய தருமப் பணி புலு சிரத்தையிற் செய்வோ, ராளையா யினுமற் றவர்நமைப் புரப்பா ரெற்றைக்கு மவரையேத் தெடுப்பாம். (உக)

ஆக்குவித்தோர்.

முகைமுறுக் குடைந்து நறவுகொப் புளிக்கு முண்டகத் தடம் புடை யுடுத்துத், தகைகெழு வளஞ்சால் சூளாயம் பதியிற் றவல ரும் வதரிசன் வீழ, னகையமர் சிறப்பி னொரும்வீற் றிருக்கு நலங் கெழு சுந்தரப் பெருமான், பகைதவிர் தெய்வ மான்மிய மென்னப் பகர்தரு பெருவட மொழியை. (க)

மொழிபெயர்த் தெடுத்துத் தமிழினற் பாடி முடித்திட வேண் டுமா லென்று, கழிமகிழ் சிறப்பக் காரை யம் புதிவாழ் கனமிகு வணி கர்தங் குலத்தோன், பொழ்பெருஞ் சீர்த்தி புனையிலக் குமணப் புண்ணியன் புரிதவத் துதித்தோன், வழிவழி யிறமே பயின்றிடு குலத்தான் மழையெனப் பொழிகர தலத்தான். (உ)

வளரொளி யனைய தளிப்பணி சிறப்பின் மல்குறப் பூதுக்கிய வள்ளல், கிளர்மணித் தடந்தோட் கிருட்டின மகிபன் கெழுதகு சிரத்தையிற் கேட்பத், தளர்வகன் றரிய தவம்பல வியற்றிச் சார்த ருஞ்சிவபத மெளிதே, விளர்தபப் புகுவா மென்பதுட் கருதி விருப் பமிக் குரைத்திட லுற்றேன். (ரு)

## அவையடக்கம்.

ஒழிவரும் பெருமை யாயிரத் தெட்டென் றோதிடு மண்ட முற் றளித்த, கழிவலிச் சூரன் புரிந்த பூசனைபோற் கசினி நாட் டிலோர் சிறிதாள், பொழிபுகழ் விசயா லயனெனு மொருவன் புரிந்தபூ சனையுங்கொள் பெருமான், பழிதபு வலியோர் பாடல்போ லெளியேன் பாடலுங் கொள்வது வழக்கால். (க)

குலமதி லுடுத்த சூரையம் பதியோன் குளிரமு தொழுக்கு வெண் பிறையு, நலமணி விடநல் கரவும்வெங் கொலையே நவிற்றிடு விடமும்மா தரித்தோன், மலருமென் பாடல் குணங்குணங் குற்றங் குற்றமாய் மருவிடு மேனு, நிலவுமிம் மூன்று மொதுவிலக் காகு கிகழ்த்துமுற் காட்டினு லவற்கே. (உ)

## சிறப்புப்பாயிரம்.

### வேறு.

நீடுகட லுலக மேத்துஞ் சூரையம் பதிப்புராணம்,
ஏடுவறு தமிழாற் சொற்றுன் வயமகுபல் கலையுந் தேர்ந்தோன்
கொடிவிஞ் துமிசூருந் தெய்வக் குளிர்சிரா மலையில் வாழ்வோ
னடிகிலை யமைமீனாட்சி சுந்தர நாவலோனே. (க)

### வேறு.

சூரையம் பதிமான் மியத்தை மீனாட்சி சுந்தர நாவலன் பா டிக், காரையம் பதிவாழ் கிருட்டின மகிபன் கருத்துற வேண்டலா லடைந்த, சீரைநன் குடுத்த கழனியம் பதிவாழ் சிதம்பர தேசிகன் வியப்ப, வேரைநன் குடுத்த கயற்கணு டிருமுன் விருந்தரங் கேற்றி னன் மாதோ. (உ)

ஆகத் திருவிருத்தம் உச.

# திருநாட்டுப்படலம்.

கார ளாவிய பூங்குழற் கயற்கணு ளோடு
நீர ளாவிய சடைமுடிச் சுந்தர நிமலன்
பேர ளாவிய கருணையிற் பொலிபெருஞ் சூரை
யூர ளாவிய பாண்டிநாட் டணிசில் வுரைப்பாம். (க)

ஆல வாய்திரு வாப்பனூ ரணியிரா மேசங்
கோல மார்திருச் சுழியல்புத் தூர்கொடுங் குன்றஞ்
சீல மார்திருக் கோயிலூர் முதற்பல செறிந்து
ஞால மார்புகழ் படைத்தது பாண்டிநன் னாடு. (உ)

பலத்தின் மிக்கது நெருங்கிவாழ் பல்குடிப் பரப்பாங்
குலத்தின் மிக்கது திமைசெய் தாரிற்கை குறைத்தோன்
வலத்தின் மிக்கது கொடுபரித் திடப்பொலி மாண்பார்
நலத்தின் மிக்கது பெரும்புகழ்ப் பாண்டிநன் னாடு. (௩)

பிறைவி ராவிய சடைமுடிச் சுந்தரப் பெருமான்
கறைவி ராவிய வாள்கொடு பகையறக் கடிந்து
துறைவி ராவிய மனுநெறி செலுத்திடுந் தொகுசீர்
நறைவிராவிய தரத்தது பாண்டிநன் னாடு. (௪)

மிக்க வான்பொரு ளாதலின் யாவரும் விழையத்
தீக்க தாய்ச்சிறு கேடுஞ்சா ராவினை வுடைத்தாய்த்
தொக்க செல்வருங் கலைஞருந் துவன்றிடப் பட்டு
நக்க மேன்மையிற் பொலிவது பாண்டிநன் னாடு. (௫)

மழைவளம்.

வான மாகிய முல்லையிற் பிடாமலர்ந் தென்னக்
கான வெண்புயல் படர்ந்திருங் கருங்கடலடைந்து
பேர வார்புனல் குடித்துடன் கறுத்தன பிறங்கத்
தார மெங்கணும் பூவைபூத் தனவெனச் சாற்ற. (௬)

கறுத்த மாமுகில் பொதியமால் வரையடை காட்சி
யொறுத்த வாள்வலி விருத்திரற் குடைந்தரு ருற்றி
வெறுத்த வானவர் குழாத்தொடு மிந்திரன் மேன்மை
பொறுத்த மாதவன் பாற்சர ணடைந்தது போலும். (எ)

விரும்பு மாமுகில் மிளிர்தடித் தீன்றிடு காட்சி
யரும்பு பேரருண் முனிவரன் கடலற்றல் குடித்துச்
சுரும்பு மூசுதார் விருத்திரற் றேற்றிடத் துள்ளிப்
பொரும்புண் வச்சிரம் புரந்தரன் விதிர்த்தது பொருவும். (அ)

முற்று கொண்டலோர் சிலைவளைத் துரறிய முழக்க
மெற்று தெண்டிரை வெளிப்படு விருத்திர னென்பான்
பற்று வெஞ்சிலை வளைத்தெதிர் பகைவனைப் பாராச்
செற்று வெஞ்சினத் தொடுமுழங் கியதிறஞ் சிவணும். (கூ)

எங்கள் வாழ்வெனு மாதவன் பொதியமுற் றெழிலி
யங்கள் வார்கொடை வேந்தனு ணையின்மழை பொழித
றிங்கள் சூடிய சுந்தர நாயகன் சேர்ந்தார்
தங்கள் பாலருள் பொழிவதே போன்றது சாற்றின். (க0)

திருந்து சுந்தர நாயகன் செய்யகோல் செலுத்தப்
பொருந்து பாண்டிநா டடங்கலுங் குளிர்செயும் பொருட்டு
வருந்து தீர்வெளிக் கங்கைமா மலயத்தை மருவி
யிருந்து கீழிறங் குதல்பொரூஉ மருவியாற் றீட்டம். (கக)

வளவில் செம்மணி யுடன்விரா யிழியும்வெள் ளருவி
பிளவி லேனைய மறம்பெலாம் வெல்பிர தாபங்
களவில் வான்றமிழ் தோன்றுசீ ரிவையுறக் கலந்து
வளவில் வீசிய மலயனின் றெழுவது மானும், (கஉ)

முற்று சந்தனங் குங்குமங் காரகின் முதலா
மற்றுமுள்ளன விரையெலா மகழ்ந்துவா நருவி
பற்றுசெந்தமிழ் மணங்குலா மிவ்வயிற் படர்ந்து
சுற்று முள்ளன மிகையெனத் தொலைப்பது துய்யும். (கங)

மூடிதொ டுத்திழி யருவிநேர் மொய்த்தசெங் காந்தள்
கூடியு டைப்பொருள் பலவுநீ வாருபு கழித

றொடிசி றப்பல வென்றுநூ றாயிரங் ஙக்கள்
வடிப ருப்பத மெடுத்துமேற் றகைப்புது மானும். (கச)

கருவி மாமுகி லிடையறு தெழுந்து நீர் கால
விருவி யம்புனை முதலிய விடமெலா மீண்டி
மருவி மிக்கெழு முழக்குடன் வயின்வயிற் றிரண்ட
வருவி பாய்தலிற் பெருகுவ பொருநையா றம்ம. (கரு)

வேறு.

கனாமுழு துிடயத் தாக்கிக் கரையிரு பாலு முள்ள
விலாமலர்த் தருக்கண் முற்றும் வேரறப் பறித்துச் சாய்த்துக்
குனாகட லகடு கீண்டு கொடுஞ்சுற வேறு கொட்பத்
திரையெறிந் தார்த்துப் பொங்குந் தெண்புனற் பொருநைமாதோ.

ஓடுகால் பலவி னுள்ளு மொருங்குபோ யிருபாலுள்ள
நாடுபே ரேரி யெல்லா நரலைகொ லெனநி றைத்துப்
பாடுசா லிடத்துஞ் சென்று பரந்ததெம் போல்வா ருய்ய
வேடுதா னெதிரே செல்ல வீர்த்தமா நதிநீர் வெள்ளம். (கஎ)

முன்னிய கழனி வாயின் முதற்பெருந் தலங்க ளெல்லா
மன்னிய வாவிச் செல்லு மதுநதி யொருபாற் பொங்கித்
துன்னியு வேரி யோடை தொகுமலர்த் தடங்க ளெல்லா
மின்னிய நிறைத்த தெங்கும் வெள்ளமே யென்ன மாதோ. (கஅ)

வரையிட முழுதும் வெள்ள மண்டிய கான மாய
தரையிட முழுதும் வெள்ளந் தடங்கிடங் கோடை வாய்க்கா
லிரையிட முழுதும் வெள்ள நெட்டிலைத் தாழைபூத்த
திரையிட முழுதும் வெள்ள மாயின தேங்கி மாதோ. (கக)

மருதம்.

பரிகிறுத் திடுவா ரெங்கும் பணியுருட் டிடுவா ரெங்கும்
விரிதரு பலாலமிட்டு மீதுமண் சொரிவா ரெங்கு
முரியநீர் போதுமாலென் றுருவினைப் பெயர்ப்பா ரெங்கு
மரிப்பித் தொழிலின் மூண்டா ரலர்பணை மருதமாக்கள். (உ0)

பொறிவழிச் செல்கை மாற்றிப் புந்தியைக் குறியி னுய்க்கு
நெறியுடை யறிஞ ரென்ன நெட்டிடைப் பாதி மாற்றி

யெறிதிரை யலைக்கும் வெள்ள மியைமத கூடு சென்று
செறிவய லகத்துப் பாய்ச்சிச் செய்தொழிற் றலைநின் றூரே. (உக)

புயலெலாங் கடனீ ருண்டு பொழிந்திட வழிந்து பொங்கிக்
கயலெலா முகண்டு தாவக் கால்வழிப் புகுந்த வெள்ளம்
வயலெலா நிறைப்ப நோக்கி வரைவிலா வுவகை பூத்துச்
செயலெலாம் வல்ல மள்ள ருழுதொழில் செய்வான் புக்கார். (உஉ)

கருகிரும் பனைய கோட்டுக் கடாய்பிடர் நுகங்கி டத்தித்
திருகுதீ ரேர்க்கா ணுப்பட் சேர்த்துவன் பாசம் வீக்கி
யொருகைவன் மேழி பற்ற வொருகையின் முட்கோல் வாங்கிப்
பெருகிய களிப்பு மேன்மேற் பிறங்கிட வுழுவா ரானர். (உ௩)

பார்நடத் தாதி நன்னூல் பயின்றிட வுதிப்பா னோர்காற்
றேர்நடத் தருணன் வெள்கத் தெற்கிருந் துதக்கி னுய்த்துங்
கார்நடத் துழவர் மேல்பாற் கழிந்துமுற் றிசையி னுய்த்து
மோர்நடத் திடுவர் புல்லென் றிசைப்பவை யாவுந் தீர. (உச)

கால்வலிக் கருங்க டாவுங் கையெடுத் தோச்சு தண்டும்
பால்படப் பிணிக்கும் வெய்ய பாசமு முடைய ராகி
மேல்வலித் தெழுவன் காலர் மேவிடிற் பழன மெங்குஞ்
சால்புடைச் சிறுபுல் லாதி தணத்தலோர் வியப்பாங் கொல்லோ. ()

உண்டிடு மருந்தின் சாரமாத்திர முடலிற் றங்கிக்
கண்டிடு பயனே செய்தல் கண்டுவன் மள்ளர் மேன்மேற்
கொண்டிடு மெருக்கா ணுதி குலவுறு தழைகள் பல்ல
மண்டிடு செறுவுள் ளிட்டுச் சாரந்தங் கிடவாஞ் சிப்பார். (உசூ)

குழைதரு வயலுட் பைம்புல் குறைத்துநீள் வரப்பின் மேலால்
விழைதரப் பொலிவ தோர்ந்து வித்தென வமர்ந்து நீர்வா
ழுழைதரு வாழ்க்கை யொட்டோ மெனச்சினந் தொழிப்பார் போலத்
தழைதரு கங்க ரிந்தவ் வரம்பின்மேற் சாரச் செய்தார். (உஎ)

பரம்பின்மே லிவர்ந்து பாசம் பற்றிமிக் கிறுமாப் பெய்தி
நிரம்புற நடத்துவார்க ணெடுவலிப் பாசம் பற்றி
யுரம்படு மிறுமாப் பெய்த லொருவியப் பன்றே யேற்றத்
தரம்பயின் றூலு மன்ன துறுதற்கோர் தடையுண் டாங்கொல். ()

மழைபொழி தலைமை யானு மருதகன் னிலத்துக் காவல்
விழைதரு தலைமை யானும் வேள்விநா யகன்றாள் போற்றித்
தழைதர வயல்க ளொன்று சாற்றினென் முளைகள் வாரிக்
குழைதரு சேற்றின் மேலால் வீசினார் குலவு மள்ளர். (உ௯)

எண்ணரிய முளைகள் வித்தி யாத்திடுங் கலங்க னீரைக்
கண்ணரிய பின்னாட் டாழ்ந்த மடைவழி கவிழ்த்த லோடு
முண்ணரிய வெண்மை தீர்ந்து பசுமையே யாய நீர்போய்
மண்ணரிய விளர்ப்பு மேவு முகிலொடு மாறுற் றென்ன. (௩௦)

செறிதவ முயன்று பெற்ற சேயினை வளர்ப்பார் போலு
மறிவுறக் கேட்ட பாடஞ் சிந்தித்து வளர்ப்பார் போலும்
வெறிமதுக் களிகூர் மள்ளர் மென்புனல் பாய்த்தி நாளுங்
குறிபெற வளர்க்க வம்மா வளர்ந்தன குலவு பைங்கூழ். (௩௧)

களைதரு கழகப் பள்ளிக் கணக்கர்நூல் விருத்தி யாகப்
புளைதரு தானம் போர்த்து வைக்குமா சிரியர் போல
வுளைதரு பைங்கூ ழெல்லா மோங்குபு விருத்தி யாக
வளைதரு பழன மெங்கும் பெயர்த்தனர் நடுவார் மள்ளர். (௩௨)

வெள்ளிய தாய்நீ ருண்டு மேகங்கள் பசத்த லோடுந்
தள்ளிய வெழுந்த சண்ட மாருதம் பொருவப் பைங்கூழ்
வெள்ளிய தாய்நீ ருண்டு பசந்தெழு வீறு முற்றுந்
தள்ளிய முளைத்த வம்மா தாமரை யாதி பல்ல. (௩௩)

களைகளை பருவ நோக்கி மள்ளர்கள் களைவா னேவ
வளைகளை யொதுக்கிக் கூந்தல் புரிகொடு வரிந்து கட்டிக்
கிளைக்கிளை யுடைக்கலிங்கந் திரைத்தனை தருஞெண் டாதி
யளைகளை பிறப்பு குந்தா ராற்றுக்கா லாட்டி மாரே. (௩௪)

பொருவருங் குவளை கொன்றார் புண்டரீ கங்கள் கொன்றார்
பருவர வாம்பல் கொன்றார் படர்ந்தவுற் பலமுங் கொன்றார்
வெருவர வனிச்சங் கொன்றார் மிடைந்தகோ கநகங் கொன்றார்
பருவுவ் ரென்று வந்தால் விடுவரோ மாய்க்கப் புக்கார். (௩௫)

காவின்றீ யகூஞ் சாயற் களிமயி லனைய மாதர்
கோவிலொடு யுறுத றேற்றார் நோக்குற வயலு லாவித்

நாவிடை யடியு ழுமன் மிதிப்பர்நண் மலரைத் தள்ளிப்
பூவிடை மிதிப்ப தல்லால் வேறொன்று பொருந்த மாமோ. (௩௬)

கொண்டலங் கூந்தன் மாதர் குனிந்தனர் களையும் போது
முண்டக மலர்கண் மேன்மேன் முகத்துற மோதா நிற்குந்
தண்டலி லரும்பி ரண்டு தனத்தினும் புடையா நிற்கும்
விண்டவ ரெதிர்ந்த காலை விடுவரோ மெலிய ரேனும். (௩௭)

முகமுத லுறுப்புப் போல மொய்குழற் கரிய வாட்கட்
சுகமொழிக் கடைசி மாதர் முலையையு மறையார் தோன்ற
நிகழர விந்த மீன்ற வரும்புநேர் பொலித னோக்கி
மிகவவற் றொடுபோர் செய்வான் வெளிப்படுத் தினர்போன் றம்மா.

கடைக்குல மகளிர் கையாற் களைந்தெறி கமல ராசி
மடைச்செழுங் குலைமேல் வீழ்ந்து வாடின சருகு மாய
வுடைத்திரு ளொதுக்கும் வெய்யோன் கமலமே லோங்கு காதல்
படைத்தவ னென்று கூறு மொழிபழு துடைய தம்மா. (௩௯)

நிறைபுனல் வயலி னூடே நிலவுறப் பயில்வா ரேனுங்
கறைகெழு வேற்கட் செவ்வாய்க் கடைசியர் முகத்து வேர்வை
யுறையெழுந் தனக்கண் பாய கமலத்தை யொறுத்த நோக்கி
யறைகதிர் வெதுப்பத் தோன்றுங் காரிய மளாயு தென்ன. (௪௦)

கயிரவங் கஞ்சமெல்லாங் கருங்குழ லுழத்தி மார்கைப்
பயினுகப் படைக டாக்கப் படிமிசைச் சாய்ந்து வீழ்ந்த
வுயர்நகப் படைமுன் னுற்று லுய்வது முண்டு கொல்லோ
பெயர்வரு மம்ப லோடு பிறங்குதா மரையு மாதோ. (௪௧)

அட்டர்பல களையு மிவ்வா றுற்றுக்கா லாட்டி மார்க
ளிடர்தபக் களைந்து தந்த மிருக்கையிற் புக்க பின்பு
படர்பிணி மிடியி லாநுண் மதியினன் பயின்ற கல்வி
சுடர்வது பொருவ வெங்கும் பணைந்தன நெருக்க பைங்கூழ். (௪௨)

ஒள்ளிய நாற்றங் காலென் றுரைபிறப் பிடத்து நின்றும்
வள்ளிய நடுகா லென்னு மணமகன் கிரகம் புக்கு
நள்ளிய பைங்கூ ழென்னு நங்கையர் குவளை யாதி
யுள்ளிய களைக ளொன்னு முறுபிணி யொழிந்தா ராகி. (௪௩)

சொற்றிடு மள்ள ரென்னுந் தோழியர் நறுநீ ரென்னப்
பற்றிடு முணவு நல்கப் பாதமென் வாயூ லுண்டு
செற்றிடு பருவம் வாய்த்துச் செழுஷிய காலமென்னு
முற்றிடு கணவற் புல்லி யுறுபெருங் கருப்பம் வாய்ந்து. (சச)

காலம்வந் தடுப்ப வீன்ற கதிரெனுங் குழவி யெல்லாஞ்
சாலவும் வான் மாய செவிலிதண் மதிய மென்னுங்
கோலமென் முலையி னின்று கொழித்திடு கிரண மென்னும்
பால்வா யுண்டு தேக்கிப் பணைத்தன பண்ணை யெங்கும். (சரு)

பெருங்கதிர் விளைந்த தோர்ந்து பிறைபுரை யிரும்பு வாங்கி
யொருங்குபல் களமர் புக்காங் கொய்யென வரிந்து சார்த்து
நெருங்குற விசித்துக் கட்டி நெடுங்களந் தலைக்கொண் டுற்று
மருங்குபல் வரைக ளென்ன வானுறப் பலபோர் செய்வார். (சசு)

போரெலாம் புவியிற் சாய்த்துப் பொருவலித் திண்டோண் மள்ளர்
காரெலாந் திரண்டா லன்ன கருங்கடாப் பிணையல் செய்து
பாரெலாம் வியக்கு மாறு மிதிப்பித்துப் பலாலம் வேறு
நாரெலாம் புரிநெல் வேறு செய்தனர் நலங்கு லாவ. (சஎ)

பரவுவைப் பொடியி னோடு பதடியுங் கழிந்து போக
விரவுமென் காலிற் றூற்றி வெற்பெனக் குவித்தல் செய்து
கரவுசற் றேனு மின்றார்க் காணித்தெய் வதமுன் னாக
வுரவுசெய் பலவு முள்ள முவப்புற வினிது நல்கி. (சஅ)

இறையவன் கடமை தீர்த்தாங் கெஞ்சிய தளவு கண்டு
நிறைபெரும் பண்டி யேற்றி நெடுநில நெளிய வுய்த்துக்
குறையறு மனையிற் சேர்த்துக் கூடுகை ணிரப்பி யார்க்கு
முறையுளி நல்கி யுண்ணுங் குடிகளே மொய்த்த வெங்கும். (சகூ)

கந்தியுந் தெங்கு மிஞ்சி மஞ்சளுங் கதித்து நாளு
முந்திய மருதத் தென்ன மொழிந்தனம் பாண்டி நாட்டு
நந்திய மற்றை நான்கு நவின்றவை யொன்றோ டொன்று
சந்திசெய் தமைந்து மேய மயக்கமுந் தன்னஞ் சொல்வாம். (ருo)

குறிஞ்சி. வேறு.

திண்வரை மேழிவ ரிதைதொறுஞ் செந்தினை வித்தி
வெண்டிரை யாரரு விப்புனல் பாய்த்துப் விளைத்துக்

கண்மை சால்கொடிச் சியரொடு கலந்துவா ழிடமாய்
வண்மை மேயது சந்தகின் மூலிபெருங் குறிஞ்சி. (ருக)

பழுக்கச் சுட்டபொற் றகடெனப் பொலிபலாச் சுளைதே
னொழுக்க வார்ந்திசும் புற்றிடுங் கொடிச்சிய ருறுபுண்
முழுக்க வோப்புவா னெறிகவண் மணியவண் மொய்த்தவ்
வழுக்கன் மாற்றிடு வளத்தது மாண்பூண்டக் குறிஞ்சி. (ருஉ)

## முல்லை.

குருந்து கொன்றைகா யாமுதற் பலமறருக் குழுமித்
திருந்து பாற்குடஞ் சுட்டுகள் கன்றொடுஞ் சிவணப்
பொருந்து மெள்வர காதியவிளைதரப் பொலியு
முருந்து வெண்ணகை யாய்ச்சியர் பயில்வள முல்லை. (ருக)

கொன்றை வேய்ங்குழ லூதுவர் கோவலர் மறக்குங்
கன்றை யான்களூந் தணந்தவர் காமவெங் கனலா
மொன்றை மேவுவர் மணந்தவ ரோகையங் கடலா
நன்றை மேவுவர் நலங்கொளித் தகையது முல்லை. (ருச)

## நெய்தல்.

அலைக டற்றலைத் திமில்விடு முழக்கமு மடுத்து
வலைவி சித்தெறி முழக்கமும் வலையிடைப் படுமீ
னுலைத ரக்கவர்ந் தீர்த்திடு முழக்கமு மொருங்கு
குலைமி சைச்செறி முழக்கமுங் குலவுவ நெய்தல். (ருரு)

கோட்டு வாய்வளை யுயிர்த்திடு முத்தமுங் குறித்து
மூட்டு மீன்பல பாய்தலாற் புன்னையின் மருவாசீ
சூட்டு நீளரும் பினங்களும் வேற்றுமை தொலையக்
காட்டு நீள்பெரு வளத்தது கருங்கழி நெய்தல். (ருசு)

## பாலை.

சாந்து நாறிய கொங்கையர் மகிழ்நரைத் தணவார்
காந்து நீளதர் கடப்புழி நல்குவ கனிபே
ரீந்து நல்குவ பாடல மலரிதஞ் செய்வ
வேந்து பஞ்சுகோங் குகுத்துமா றுதிரும் பாலை. (ருஎ)

வறிய கூவலொன் புனலிலா திருப்பது மிதித்து
நறிய பாடலம் மலர்மது நிறைத்திடு நாமஞ்
செறிய வாவயிற் பயிலுவர் சிலைவழி மறவ
ரறிய மேவுவள் கொற்றியு மவாவியப் பாலை. (ருஅ)

நெய்தல்.

வரையின் வாயிரு விரிதரு மதுவமுங் கான
திரையி னுஞ்சொரி நீரமு நெடியகா லோடைத்
தரையின் மாங்கனிச் சாறுமோர் நடையற வோடித்
திரையின் வாய்ப்புகூட வகற்றுவ தேங்குவ ரொருசார். (ருகூ)

மருவு பாண்டிநன் னாட்டம னைந்திவை வளமு
மொருவு றுதெவ ருரைப்பவர் யாமெவ னுரைத்தாம்
வெருவு நீர்தரச் சுந்தர நாயகன் மேவும்
பொருவில் சூரையம் பதிவளத் தினுஞ்சில புகல்வாம். (சு0)

திருநாட்டுப்படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் அஅ.

---

# திருநகரப்படலம்.

அலங்குற மாளிகை யடர்க்கும் பல்பிணி
விலங்குற மாமறை விதிய னைத்துநன்
றிலங்குற வதமெலா மெற்றை ஞான்றினுந்
துலங்குற வொளிர்வது சூரை மாநகர். (க)

பூவினிற் றாமரை போலும் பூத்தொளிர்
காவினிற் கற்பகம் போலுங் கண்ணிய
தேவினிற் சிவபிரான் போலு மூர்களிற்
சேவினிற் பொலிவளச் சூரை மாநகர். (உ)

பிரமலர்த் துவன்றிய காவும் பாங்கரி
னுன்மலர் பழனமு நிரம்பு நீரதாய்

முன்மல ரோடையு மொய்த்துச் சூழ்தரு
சொன்மலர் வளத்தது சூரை மாநகர். (ங)

அடியவர் மகிழ்தர வருளும் வெள்விடைக்
கொடியவர் மகிழ்ந்தமர் கோல மேயது
படியவர் புகழ்ந்திடை படிய தங்கையிற்
றொடியவர் பயில்பெருஞ் சூரை மாநகர். (ச)

மன்னிய சிவபிரான் வதரி நீழலை
முன்னிய மாதவர் முயற வந்தது
மின்னிய வமரரும் விரும்பு மேன்மையிற்
றுன்னிய வளத்தது சூரை மாநகர். (ரு)

வயல் சோலை முதலியன.

விளைதரு பழனமும் விரும்பு சோலையுங்
களைதரு மலர்பல கவின்ற பொய்கையு
மளைதரு மெய்யுடை யாரைப் பேரறம்
வளைத்ரு திறமென வளர்ந்து மல்குமே. (சா)

முன்விரும் மினத்தினு ளொன்று முத்திசேர்ந்
தின்னலம் பெறவரு ளிறைவன் றேமெனு
நன்னல முறப்பணை நாளு மேவுவ
பின்னமில் பீலியிற் பிளிறு நாரையே. (எ)

தம்மின் தொன்றுமுன் பகைமை சார்ந்ததா
லம்மமர்ந்தறுதவிர்க் தருள்வி ராவுவான்
செம்மலர்ப் பணைதொறுஞ் செறிந்த மைந்தெனக்
கொம்மெனச் சூழுவ குரண்ட ராசியே (அ)

முன்புநா ளைக்கருண் முதல்வ னம்மையுந்
துன்புதீர்த் தருளுமென் றுய்ந்து சூழ்வழிபா
லன்புமே வகன்பணை யகத்து மற்றுள
நன்புள்யாவையுஞ்சூழீஇ நலக்க மேவுமே. (கூ)

மருவுவண் சூரைசூழ் வயங்கு சோலையின்
பொருவரும் பெருவளம் புகுந்து நோக்குறீ

2556.



வெருவுகற் பகத்தையே வியந்து பேசுவா
ரிருமையு நோக்குறி னியம்பு வார்கொலோ. (கO)

தடாகம்.

செய்யதா மரைமுகஞ் சிறந்த வுற்பல
மையவாம் விழியரக் கிரம்பல் வாய்மல
ராயநல் வள்ளிகா தாக நாடொறும்
வெய்யதிர் தடாகமெல் லியலின் ளங்குமே. (கக)

தம்மியற் பெயர்முதற் சார்ந்த கண்ணுடை
யம்மைநன் கமர்தல மாத லான்மகிழ்
விம்மநன் கெழுந்துதாம் விதத்தின் வாவியுட்
செம்மைசேர் கயல்பல தாவுஞ் சீரவே. (கஉ)

அலர்மிசை வதிதரு மன்னம் பாலுக
ளுலர்தலில் கயலைவாய்ப் பற்றி யுண்ணுவ
மலர்சிறு முயற்சியின் மருவி நாடொறும்
புலர்தலில் பயனுகர் புண்ணி யத்தர்போல். (கங)

பரவுதன் கூறெனப் பட்ட நாவலர்
விரவிடங் கலைமகள் விழைந்து சார்ந்தெனக்
கரவிலம் போருக மலரிற் காமரா
தரவுட னேதிமங் தங்கு மென்பவே. (கச)

மருவுநங் காதலன் மாணப் பூசித்துப்
பொருவரு வரம்பெறு புரியி தாமெனக்
கருதியுண் மகிழ்தல்போற் காமர் தாமரை
வெருவற மலர்ந்துநீர் நிலைவி ளங்குமே. (கரு)

புரையற வுற்பலம் பூத்த வாவியிற்
றிரையெழு கஞ்சமேற் செறிந்த வால்வளை
கரையெறி காளிந்தி நதியிற் கஞ்சமேல்
வரைமகன் வளையுறு வளர்ந்தெ ரிக்குமே. (கசு)

திரையெறி தரளம்வெள் வளையிற செம்மைசால்
விரையெறி தாமரை மலரின் மேவுவ

குளாயெறி பாற்கட லுயிர்ந்த கொள்கைசால்
புளாயெறி யிருகிழிப் பொலிவு காட்டுமே. (கஎ)

சூரியன் பூசனை தொடங்கிச் செய்தவச்
சிரிய நகரிடைப் பிறையுஞ் சேர்ந்துநன்
காரிய பூசனை யாற்றச் சேறல்போ
லோரியல் வெள்வளை குலைக்க ளூருமே. (கஅ)

வள்ளிய சங்கநா வலரொ ருங்குள
முள்ளிய வொருகவி யோதி விட்டவன்
றெள்ளிய புகழெனத் தெளிந்த நீர்க்கரை
வெள்ளிய வளைமணி விராய்க்கி டக்குமே. (கக)

வெய்யதே னுழுக்குபு விராவி வண்டுணச்
செய்யதா மரைபல செறியப் பூத்துல
குய்யவாந் தடத்திடை யுறத்த மைத்திடு
மையநா யகன்கரை யமரின் வாட்டமென். (உ0)

முன்னுபங் கயந்தொறும் வண்டு மூக்குவ
வுன்னுநன் பகைமனை யென்ப தோர்ந்திரு
டுன்னுபல் லுருக்கொடு துவைத்தல் போலுமாற்
பன்னுதே னுகலமும் பான்மை போலுமே. (உக)

புறநகர்வளம்.

யானைகள்.

சல்சல மும்மதம் பொழிந்து தாழ்மணி
கல்கல வொலித்திடக் களிறு லாவரும்
பல்பல வரைகளும் பரந்த கால்பெறீஉ
வுலர்தலி லருவியோ டுலாய தென்னவே (உஉ)

படர்கரி யெனப்படும் பழையர் வண்கவுட்
குடங்நிறை கடாமெனுக் கூறுங் கள்ளினை
யடர்கறை யடிச்சுவ டாங்க லத்துவார்த்
தூடல்பல வளிகளாங் களியர்க் கூட்டுப. (உங)

### குதிரைகள்.

காலில வுருக்கொடு கால்க ணுங்கொடு
சால்புறத் திரிந்தெனச் சலிக்கும் வாம்பரி
நூல்பல வுணர்ந்தவர் நுனித்துக் கூறிய
பால்படு மிலக்கணந் தெரிந்த பண்பினே. (உச)

வாதவூ ரடிகளுக் காக வையமுற்
ருதரஞ் செயப்பிரா னமைத்த வாம்பரி
போதரா லுற்றது போற்றுஞ் சூளைவாழ்
மேதகு பரிக்குமு னிற்றல் வெள்கியே. (உரு)

### தேர்கள்.

பாதல மடித்தலங் காணப் பைம்பொன்செய்
மீதல முடித்தலங் காணமேதகு
பூதல மிசைச்செலும் பொன்செய் தேர்பல
காதலங் கதிருஞ்செய் காட்சி சான்றவே. (உசா)

கடும்பரி யீரிரு கால்வ யத்தவா
யடும்பரி வகன்றதே ரலங்கு றப்புனேங்
திடும்பரி கால்களீ ரிரண்டுஞ் செல்வன
படும்பரி காந்தப்பின் படரி ரும்புபோல். (உஎ)

### வீரர்கள்.

விழித்தகண் ணிமைத்திடார் வேலெ றிப்பினு
மொழித்திடா ருயிர்சுமந் துழன்று மானத்தை
யிழித்திடார் கன்னிலைத் திலங்கு வீரரைப்
பழித்திடாரி வினையர்கல் லூரி யும்பல. (உஅ)

இப்புறோர் கொடுங்கணை யிப்பு ரோரயி
லிப்புறோர் கழுக்கடை யிப்பு றோர்வசி
யிப்புறோர் மால்களிற் றுலவை யெஃகமேரி
ரிப்புறனென் றுறகிறத் தெடுத்துக் காட்டுவார். (உகூ)

### ஆயுதமுதலியன இயற்றுவோர்.

அத்திர சத்திர மாதி யாயவு
மத்திகை கடுங்கடி வாளங் கிம்புரி

மொய்த்தகூ விரங்கிடு காதி முற்றவு
மெய்த்திடா தியற்றுந ரிருக்கை மல்குமே. (ந.0)

## அகநகர்வளம்.

அகழி. வேறு.

ஓங்கு சுந்தர நாயக னுறைதலா லாங்கு
வாங்கு தெண்கடலேழுமன் னிமதிற மதித்து
வீங்கு நீர்ப்பெரும் புறக்கடன் மேதகு விருப்பி
னீங்கு மேவிய தென்னலா மிஞ்சிசூ ழகழி. (௩௧)

மதில்.

தன்னைச் சூழ்தரு கதிரவன் பூசித்த தானந்
தன்னைக் காதலி னேக்குவான் பற்பல சயிலந்
தன்னைப் போற்றிடப் பொலிவரை சார்ந்துசூழ்ந் தென்னத்
தன்னைப் போலிலாத் தடமதில் சூழ்ந்தொளிர் தகைத்தே. ()

மாளிகைகள்.

இரவு மேவுவெண் கதிரினைச் சுண்ணஞ்செய் தெடுத்துப்
பரவு மாறுபூ சியதெனப் பயில்சுதை தீற்றிக்
கிரவு தீர நுண் டொழில்பல கைபுனைந் தமைத்த
வுரவு மாளிகை மீப்பயி லுவமுகி லொருங்கு. (௩௩)

கோட்டு நூறுறக் குழைத்துமேற் பூசுசெய் குன்ற
மாட்டு மாமதி தங்குதல் கதிரவன் மலநோய்
வீட்டு பூசனை புரிந்ததே மென்றுளம் விழைந்து
நாட்டு தானும்பூ சிக்கவந் திறுத்ததே நயக்கும். (௩௪)

வான ளாவிய மாடமேற் றுகிற்கொடி மரம்போய்க்
கான ளாவிய கற்பகக் கிளையொடுங் கல்ப்ப
வூன ளாவிய வச்சிரப் படையினு னெழுகுந்
தேனளாவிய மலரிலா தென்னெனத் தேர்வான். (௩௫)

வீதிகள்.

கருகெ டுங்கணா ரூடலிற் பறித்தெறி கலனும்
பொருவி லாமலர் மாலையுங் குப்பையாய்ப் பொலியுந்

தெருவின் மேவுவோ ரொதுங்குபு பயப்பயச் சேறன்
மருவுவாருயி ரூற்றினை யஞ்சுமா தவர்போல். (௩௬)

## கடைவீதிகள்.

மேகமண்டலந் தோய்தரக் காவணம் விரித்துப்
பூக முங்குலைக் கதலியும் வேழமும் பொருத்தி
மோக நன்குறக் குளிர்புனன் முற்றவுந் தெளித்துப்
போக வைப்பென வாவண வீதிகள் பொலிவ. (௩௭)

கட்டு மாலையும் பூக்களுங் காயொடு கனியு
மட்டு ருகபன் முதிரையு மணங்கமழ் சாந்தும்
பட்டு வர்க்கமும் பன்மணிக் கலன்களும் பிறவு
மெட்டு மாதிரங் கரும்வியப் புறநிறைந் திருப்ப. (௩௮)

விரும்பு மைம்பொறி நுகர்பல போகமும் வெறுப்ப
வரும்பு மாவணப் பொலிவினைத் தெனவளப் பரிது
சுரும்பு மாலிகைச் சூரமைத் தியதிறந் துணிந்து
பெரும்பல் போகமுந் தொக்கென நாடொறும் பிறங்கும். ()

செஞ்சு டர்ப்பிரா னடைந்தருச் சித்தது தெரிந்தே
யெஞ்சு மற்றுள கோள்களுந் தொழப்புகுந் தென்ன
மஞ்சு துஞ்சிய நிவந்தெழு மாடமா ளிகைமேல்
விஞ்சு பன்னிறச் சிகரங்க டனித்தனி விளங்கும். (௪0)

## பரத்தையர்தெரு.

வைய மாகிய கடலிடை வரிவிழி யாய
வெய்ய வார்வலை வீசியா டவரெனு மீன்க
ளைய கைப்படுத் தன்னவர் கைப்பொரு ளாய
கொய்ய வார்த்தசை பறித்துண்மா தர்கடெருக் குலவும். (௪௧)

ஆட லாற்சிலர் யாழெடுத் தமுதுகுத் தென்னப்
பாட லாற்சிலர் படாமுலை யழுந்தமார் பணைந்துக்
கூட லாற்சிலர் கொவ்வைவா யூறன்மிக் கருந்தி
நீடலாற்சிலர் மயங்குற நிகழ்த்திவாழ்ந் திடுவார். (௪௨)

### வேளாளர்வீதி.

தூய நாயகன் காகுலத் துதித்தவர் துகளின்
ரூய வாய்மைய ரொப்புர வாற்றுதற் கஞ்சார்
பாய சீர்த்தியர் பண்புற வுழுதொழில் பயின்ற
மேய வாழ்க்கையர் வீதியு மாயிடை விளங்கும். (சங)

வருவி ருந்துப சரித்தலாற் றம்பசி மாற்றார்
பொருவில் கேள்வியர் சிவார்ச்சனை நாடொறும் புரிவார்
வெருவி லாதுப காரமே விழைந்திடு மேலோர்
மருவு வார்தெருப் பெருவளம் யாவரே வகுப்பார். (சச)

### வணிகர்வீதி.

நிறைபெ ரும்பொரு ளுடைமையிற் றனதனே நிகர்வார்
மறையெ னும்படி மலைதரா மொழிபயில் வல்லார்
கறைய றுஞ்சிவ தருமமே பொருளெனக் காமுற்
றுறைம கிழ்ச்சியி னீட்டுவா ரிருக்கையு மொருசார். (சரு)

வெருளும் வன்சொலி லாதவர் மேதக வயலார்
பொருளுந் தம்பொருள் போனினுந் தாக்கமே புரிவா
ரருளு மம்பிகா பதியடிக் கன்புசற் றகலார்
மருளுஞ் செய்கையில் வணிகர்தம் வளஞ்சொ லும் வரைத்தோ.

### அரசர்வீதி.

திருந்து செய்யகோ லுடைவிச யாலய தேவன்
பொருந்து பல்கிளை துவன்றிய பொற்பினிற் பொலிவ
மருந்து கொண்டினும் வாழ்க்கையர் வாழுமூர் மயங்கா
திருந்து வாழ்தர நிவந்தன வரசர்வா ழில்லம். (சஎ)

எங்கு மல்கிய துணங்கற லெடுத்துவீய்ப் பெய்து
பொங்கு செஞ்சுடர் விடுமணி பொலிந்துவாள் வேந்தர்
தங்குமாளிகை விளங்கலா லந்நகர் தணவாக்
கொங்கு டில்குதா ரமரரு ரெனப்படுங் குறிக்கின். (சஅ)

### மறையவர்வீதி.

அங்க மாறுநன் குணர்ந்தவ ருருமறை யாளர்
பங்க மேவுறு வாய்மையர் பசுவுடம் பழித்துத்

தங்க மேவிய பதிகமுல் சார்பெருந் திணிவோர்
தங்கள் வாழ்மனை வீதியு மொருபுறந் தயங்கும். (சகூ)

மறைமு முக்கமும் வானவா யிவிகொள விளிக்கு
நிறைமு முக்கமுந் தொழுபவர்க் காசிக ணிரப்புங்
குறைமு முக்கமும் பரமுதத் தொடர்பறகி களிவா
னறைமு முக்கமும் பெருகுவ வையர்வாழ் வீதி. (ருo)

ஆதிசைவர்மாளிகைகள்.

பூதி கண்மணி வாஞ்சையர் பரார்த்தமும் போற்று
நீதி வாழ்க்லகய ராகம நெறிமுமு துணர்ந்தோர்
காதி மும்மலங் கண்ணுத லடிநிழல் கலக்கு
மாதி சைவர்வா ழிருக்கையும் பொலிதரு மாங்கண். (ருக)

அன்னசத்திரம்.

விருப்பு மேவர யாவரும் விழைந்துண முல்லை
யருப்பு நேருநல் லடிசிலும் பொன்னிற மமைந்த
பருப்பும் பாகுங்குய்க் கருனையுஞ் சிற்றுணப் பலவு
மிருப்பு வாய்ந்தசத் திரங்களு மாவயி னிலகும். (ருஉ)

தண்ணீர்ப்பந்தர்.

பேணி யாலவா யமைத்தெனச் சுந்தரப் பெருமான்
காணி யாயவிவ் விடத்தினுங் கலந்தமைத் தென்ன
காணி வெய்யவன் வெப்பறப் பெருங்குளிர் நலஞ்செய்
பாணி மேவிய பந்தரும் பொலியுமோர் பாங்கர். (ருங)

சைவமுனிவர்மடங்கள்.

சரித மார்க்கமுன் னுயகான் மார்க்கமுஞ் சமைந்தா
ரோத மார்க்கமென் றுள்ளன யாவையு மொழிந்தார்
நாத மார்க்கமே லொன்றியொன் றாகிலை நயந்த
போத மார்க்கர்வாழ் திரு மடங் களும்பல பொலிவ. (ருச)

திருக்கோயில்.

இன்னபல்வளத் திருமட முதலிய வெவைவியு
மன்ன நாப்பண்விற் றிருப்பது பேரருள் வலிசா

லன்ன மென்னடை யங்கயற் கண்ணியோ டனைத்துஞ்
சொன்ன நாயகன் மகிழ்ந்தமர் சுடர்மணிக் கோயில். (ருரு)

பொற்றமரை.

வருந்து பல்லுயிர்ப் பவப்பிணி தீர்க்குநன் மருந்தாய்ப்
பொருந்து பற்பல பூமுதல் வளத்தொடும் பொலியு
முருந்து வெண்ணகை யொருபுறச் சுந்தரர் முன்பு
திருந்து நன்மையின் விளங்குபொற் றாமரைத் தீர்த்தம். (ருசு)

திருக்கோபுரம்.

நிலவு பொன்முடிக் கண்ணிறைந் தவனெனு நெடியோன்
குலவு சந்நிதி முன்கரங் குவித்துநின் றென்னக்
கலவு பொன்னிணி முடிமிசைத் துகிற்கொடி கவின
வுலவு வானொடு நின்றிடு மோங்குகோ புரமே. (ருஎ)

திருமதில்.

பகைவி ராயுருச் சிதைந்தசோ மூன்றுமுட் படர்ந்து
நகைவி ராவுமோ ருருக்கொடு நலமுறச் சூழ்ந்து
தகைவி ராவுமா நின்றதை யென்னலாந் தணவா
முகைவி ராவுபூங் கொன்றையான் றளிமுதன் மதிலே. (ருஅ)

விமானங்கள்.

மாறு கொண்டசோ வன்னன மருவுதன் மதித்து
வீறுகொண்டபொன் மேருவுஞ் சேயொளி வேணி
யாறு கொண்டவற் குதவிசெய் பாக்கவண் மருவிக்
கூறு கொண்டிருந் தெனப்பல விமானங்கள் குலவும். (ருகூ)

அன்றி யுந்தொழு தேத்திய கதிரவ னரற்கு
மொன்று பல்லுல குயிர்த்ததா யாகிய வுமைக்கு
நன்று தண்ணிய வுருக்கொடு நிழல்செயு நலம்போ
லென்று மொண்கதிர் பரப்புவ விமானமே ரிரண்டும். (சு0)

இலந்தைவிருக்ஷம்.

புரிந்து நிழன்மாத் திரஞ்செயுங் கடம்புபோ லுநதி
பிரிந்து நிழலும் படர்சுவைக் கனிகளு முதவித்

தெரிந்து தீங்கனி தெவ்வுவா னடைதரு தெவ்வு
யிரிந்து போகுகண் டகமுங்கொண் டிலகுமோர் வதரி. (சுக)

எண்ணில் பல்கிளை மலிகடம் படியில்வீற் றிருப்போன்
மண்ணி னுத்தகு வதரிநன் னீழலு மருவல்
கண்ணு மின்சுவைக் கற்பகத் தும்பெருங் கனிக
ளெண்ணு கிற்றுவி னைகவ ராசைகூர்ந் தன்றே. (சுஉ)

மற்ற விசேடங்கள்.

மறைமு ழக்கமு மாகம மெனப்படு மானூற்
றுறைமு ழக்கமுங் குடமுழா முதலிய தொக்காங்
கறைமு ழக்கமு நால்வர்வாய்ப் பாட்டொலி யறையு
நிறைமு ழக்கமு மெழுகடன் முழக்கென நிமிரும். (சுங)

சூழு வார்களு மரகர கரவெனத் துதித்துத்
தாழு வார்களுந் தடங்கனி ரிறைத்திரு வினையும்
போழு வார்களும் புகர்மலங் கழிப்பியா னந்தத்
தாழு வார்களு மளவில ராவயி னம்மா. (சுச)

இன்ன பல்வள மலிந்தபொன் னுலயத் தெங்கள்
கன்ன லஞ்சுவை கனிந்தசொற் கயற்கணு ளோடு
மன்ன மேனமு முணர்தராச் சுந்தர வமலன்
றுன்ன வீற்றிருந் தாருயிர்க் கின்னருள் சுரக்கும். (சுரு)

திருநகரப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கஙரு.

---

# நைமிசவனப்படலம்.

வலனுயர் மாதவர் வைகுதற் கிடமாய்ப்
புலனுயர் கங்கையம் படிகளை யகத்திற்
குலனுயர் கருப்பல குழுமவுற் றிருக்கு
நலனுயர் பெரும்புகழ் நைமிசக் கானம். (க)

மாங்கனி களுமுயர் வருக்கைக ளீன்ற
தேங்கனி களும்வரி நல்லசெழுங் கதலி
யாங்கனி களுமதி னயிறலிற் கற்பந்
தூங்கனி களுமறந் தனர்சுக முனிவர். (உ)

சிங்கமும் யானையுஞ் சினங்கெழு புலியும்
பங்கமில் கலையும்வெம் பணியுமொண் மயிலும்
பொங்குவெம் பகையறப் பொலிதலின் முதல்வன்
றிங்களு மரவமுஞ் செறிசடை வனமே. (ங)

கற்பகம் பொலிதரு கடவுளர் பலரு
மற்பக முறவஙிக் கணவரிற் கறம்வார்
பொற்பமர் கனவினு மதுபுரிந் திலரேற்
சொற்பயி லிதன்வளஞ் சொல்லவெண் மையதோ. (ச)

செஞ்சடை மாதவர் திருமலர் செறிந்து
மஞ்சடை வாவியின் வயங்குட னனைப்ப
பிஞ்சடை தருக்குலம் பெய்மது மழையிற்
றஞ்சடை மாக்குலந் தம்முடன னைப்ப. (ரு)

சோதகமில் பேரருட் குழிசிய ராய
மாதவர் மேனியை மறைத்தல்வெண் பொடியே
மேதகப் பயிறரும் விலங்குடன் மறைத்தல்
சீதள நறுமலர் செறிந்தவொண் பொடியே. (சா)

பிறைபுரை மருப்புடைப் பெருங்குரல் வேழக்
கறையடி மிதிப்பதக் கானக மலரே
மறையுணர் முனிவரர் மலரடி மிதிப்ப
திறைமதன் விடுசர மாயபன் மலரே. (எ)

பாயவன் மரம்பல பயிலுமவ் வனம்பூ
மேயவ னுருக்கொடு விள்ளுவ செருந்தி
மாயவ னுருக்கொடு மல்குவ காயா
தூயவ னுருக்கொடு சுடர்வன விதழி. (அ)

மாதவர் செஞ்சடை வளைதர யாத்துப்
பாதவ நிழற்சிவம் படர்ந்தினி திருப்பார்

மேதகு மவர்சடை வீழ்தர வகத்திப்
போதவிர் பிறைச்சடைப் புனிதனை நிகர்வார். (௯)

உறுவா ரருகுறு முழைச்சிறு கன்றை
மறுவறு மொருகரந் தாங்குவர் மகிழ்ந்தே
யறுபகை யறுபகை யாக்கிய வவர்பின்
பெறுவது தெரிந்தமுன் பழகுபெற் றிமைபோல். (௧0)

இத்தகு நைமிசத் தினிதுறை தருவா
ருத்தம வெள்ளிய நீறுடல் வயக்கிப்
பத்தியிற் கண்மணி பற்பல பூண்டு
புத்தியி னங்கெழுத் தெண்ணுபு பொலிவார். (௧௧)

எழுகடல் பொங்கி யெழுந்து பரம்ப
முழுமலை பேர்த்து முழங்கு கொடுங்கால்
கெழுதரு மேனுங்கி லேசமொன் றில்லார்
வழுவறு தங்கண்ம னந்தடு மாறார். (௧௨)

முளைத்தெழு காமமு தற்பல குற்றம்
வளைத்தெழு மாறும னத்திட னல்கார்
தளைத்தெழு பந்தம றுத்துயர் சால்பிற்
றிளைத்தெழு வாரருு டேக்கிய நீரார். (௧௩)

மாலய னாதியர் வாழ்க்கையு மெண்ணார்
காலவி கற்பமொ ழிந்தக ருத்தார்
சீலமு ருக்கொட மர்ந்தன சீரா
ரோலமை றைத்தலை யுள்ளது தேர்வார். (௧௪)

இருவினை யின்பய னின்பொடு துன்ப
மருவி னுடற்குள தென்றும திப்பார்
கருவறு மாறுக தித்தவு பாய
மொருசிலர் மர்க்கதை வாஞ்சையென் றுள்வார். (௧௫)

வேறு.

புலத்தியன் றுருவாசன் புலகன்வே தாரணியன்
கலத்தியல் சுகனுணி மாண்டவி யன்சங்க

னலத்தமை சுனப்புக்ச ஞரத னருவசிட்டன்
குலத்துயர் சம்வர்த்தன் குணமலி மதுப்பிரியன். (கசு)

சம்புதற் பரன்விந்தன் சவுநகன் சமதங்கி
யிம்புவி புகழ்கார்க்க னகத்தியன் காசிபன்சீர்
நம்பிரா வதன்கிருது நாடிய புகழ்ப்பிருகு
வம்பிலுத் தாலகன்கோ சிகனுயர் மாநேசன். (கஎ)

கண்ணுவன் வாமதேவன் காத்தியா யனனாதி
யெண்ணரு முனிவரரு மீண்டினர் நறுங்கொன்றைக்
கண்ணிய னருள்பெறுவான் கரிசறு மாமகமொன்
றண்ணிய காதலினோ டாற்றின ரப்பொழுது. (கஅ)

வெள்ளிய திருநீறு மேனியின் மேற்பொலிய
வள்ளிய வக்கமணி மாலிகை யுங்கவின
வுள்ளிய வெழுத்தைந்து முச்சரித் திடுநாவோன்
றள்ளிய விருவினையான் றளைபிறி தொன்றுமிலான். (கசு)

மன்னிய புகழ்வாத ராயணன் மாணக்கன்
பன்னிய வீரொன்பான் புராணங்க ளும்பயின்றோ
னுன்னிய மாணவக ரொருங்குபின் றொடர்ந்துவர
மின்னிய குணச்சூத முனிவரன் வந்தனனால். (உ0)

வந்தவன் றனைக்கண்டாங் கிருந்தபன் மாதவரு
முந்தமி லுவகையராய் விரைந்தெழுந் தடிபணிந்து
நந்தலி லோரிருக்கை நல்கிமற் றதிலிருத்தி
முந்தநல் லுபசார முழுமையு முறையாற்றி. (உக)

யாவரு மிருக்கவென வெதிரிரு பாலுமிருந்
தோவரு முவகையரா யுத்தம முனிவரனே
மேவருஞ் சிவசரிதம் விரித்துணர் மேன்மையனே
தாவருங் கிருபையனே யெனத்துதி நனிசாற்றி. (உஉ)

திருவளர் மகமொன்று செய்திடு மிப்பொழுது
குருவளர் தெய்வமுனைக் கொடுவந்து விட்டதனை
வருவன ரிம்மகமுந் தூய்மைய துத்தமனே
வெருவளர் வினைநீங்கி மேன்மையுற் றனம் யாமும். (உங)

என்றுபன் முகமனுரைத் தியாங்கசொல் லாமுய்ய
நன்றுசெ யிஃதுணர்ந்து நானிலங் கருமுய்யக்
குன்றுவில் கொண்டசுரர் கொடுமதின் மூவ்றெரித்தோ
னென்றுபிஃ றலந்தம்மு ளொருதல மினிதுரைத்தி (உச)

தலமூந லொருமூன் றுந் தனித்தனி சிறந்ததுவாய்ப்
புலமுற நினைத்தாலும்புந்திமுத் தியுமளிக்கும்
பலமிகு மொருதானம் பிகர்ந்தருள் செயவேண்டும்
வலமிகு புகழ்ச்சூத மாதவ வென்றனரால். (உரு)

வேறு.

முனிவர ருரைத்த வார்த்தை முழுமையுஞ் செவியி னேற்றி
நனிமகிழ் பூத்துச் சூத நன்முனி யொருமு கூர்த்தம்
பனிமதி முடித்த வேணிப் பகவனைத் தியானஞ் செய்து
கனிதரு முளத்தி னென்று கண்டினி துரைக்க லுற்றான். (உசா)

களைதரு தவத்தீர் நல்ல காரியம் வினவுநீர் நும்மாற்
புளைதரு தன்மை யேனும் பொலிதவ முடையே னானேன்
விளைதரு சிவபு ராண விருப்பமே யெந்த ஞான்றும்
வளைதரு சிலையான் பாத மருவுதற் கேது வாமால். (உஎ)

வெள்ளியங் கயிலை யாதி விரும்புமஃ றலங்க ளுள்ளு
மொள்ளிய மேன்மை வாய்ந்த வுத்தமத் தலமொன் றுண்டால்
வள்ளிய வனைய தானத் திருப்பெயர் வகுப்பி னெல்லாந்
தெள்ளிய முனிவீர் சூரை யென்மனர் சிறந்த சான்றோர். ()

மறைநெறி வியாத மேலோன் வகுத்தவீ ரொன்பா னென்னு
மறைபுரா ணங்க ளுள்ளொன் றாகிய காந்தந் தன்னிற்
கறையில்கேத் திரகண் டத்திற் கரைதரப் பட்ட தாரு
மிறைகரு தினர்க்குத் தீர்க்கும் வதரியா ரணியமேன்மை. ()

அத்தல மூர்த்தி தீர்த்தந் தலமென வாய மூன்று
மெத்தலங்களினு மெய்தா விசேடமா யிருக்குநாளுஞ்
சுத்தல செல்வி போல யாவுங்கண் டியர்ந்த சான்றீர்
முத்தலம் புகழுந் தான மான்மிய மொழிவாங் கேண்மின். ()

திரையெழு குமரி யாறுஞ் செம்மணி சிந்தி நாளுங்
கரையுடைத் தெழுவெள் ளாறுங் காமரு தென்பாற் றிக்கு
முரியவெம வடபாற் றிக்கு மெல்லையா யொழுகக் கொண்டு
புரைதரு வளங்க ளைலகிப் பொலிதரு பாண்டி நாட்டில். (நக)

மறிதிரை சுருட்டி யோடு மதுநதி வடபாற் கோட்டி
னெறியுயிர் முழுதுங் காக்கு நெல்லைநா யகியோ டெங்க
ளறிவுரு வான கொற்ற வாளீச ரமர்ந்து வைகுஞ்
செறிமலர்ப் பொழில்சூழ் தெய்வக்கோயி லூர்க்குதீசித்திக்கில்.

விரிசிறை யிரண்டு புள்ளும் விழுங்கிய பிழையி ரிப்பான்
பரிவொடு மயூர மெங்கள் பரம்பர னிரஞ்சேய் பாத
முரியபே ரன்பிற் போற்றி யுவத்தலின் மயூர வெற்பென்
றரியயன் முதலோர் போற்று மதற்குநேர் குணக்குத் திக்கில்.

சத்திய முதல்வ னென்று தணப்புறு திடப்பான் மேவிச்
சத்திய நாதன் பொற்றுள் சக்கர பாணி யென்றுஞ்
சத்திய நெறியிற் போற்றத் தவாதவன் மருவுந் தெய்வச்
சத்திய கிரியென் றோதுந் தலத்துக்குத் தென்பாற் றிக்கில். ()

நன்னிய மத்தை மேவி நைந்துநைந் துருகு வாருட்
மின்னிய மத்த ளாய சுரிகுழ லுமையா ளோடு
மின்னிய வேணிக் கூத்தர் வீரசே கரனார் மேவ
மன்னிய புகழ்சால் வீணா வனத்திற்கு மேல்பாற் றிக்கில். ()

தனித்தனி யனாயே யென்று சாற்றும்யோ சனையி னெல்லை
யினித்தவத் தான மேவு மெண்ணினு மெல்லா நல்கும்
பனித்தநீர்த் தடஞ்சூ பூந்தத் தானத்தைப் பம்ப ருரு
முனித்தரின் வந்து வந்து வானரும் வணங்கிப் போவார். (நசு)

கனிபல துவன்று நின்ற காமரு வதரி நீழற்
பனிமதி முடித்த வேணிப் பண்ணவன் கயற்க ணாளோ
டினிதமர்ந் திருக்கு நீரா லிலந்தையா ரணியமென்றோர்
நனியுவர் திருப்பர் யாரு நவில்வரச் சூதைக் கம்மா. (நஎ)

என்றுரை செய்த சூத மாதவ னிருதாள் போற்றி
நன்றுரை செய்தா யைய நலமலி சூதா யென்னுந்

றொன்றுளா யுறுதற் கேது வென்னைகொல் சொற்றி யென்று
ரன்றுளா யில்லாச் சூத மாதவ னறைய லுற்றான். (௬௮)

நைமிசவனப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௧௬௧.

# சூரியன்பூசித்தபடலம்.

தண்ணிய மதியஞ் சூடுஞ் சங்கரப் பெருமான் பாத
நண்ணிய கருதிப் பாச நாசஞ்செய் தின்ப மேய
புண்ணிய முனிவீர் விண்ணும் புகழ்தரு சூரை யென்ன
நண்ணிய நாம வேது நவிற்றுது நயந்து கேண்மின். (௧)

திகழ்தரு தவத்தின் மிக்கான் சிறுவிதி யென்னும் பேரா
னிகழ்தரு தன்மை யில்லா வெழில்வளர் கருங்கட் செவ்வாய்ப்
புகழ்தரு மிருபத் தேழு மகளிரைப் புணர்ந்து தீமை
யகழ்தரு மதியோன் கொள்ள வளித்தவற் கிது சொல்லும். (௨)

நிறைமதித் தேவ கேட்டி நேரிழை யினையர் தம்மைக்
கறையமை பக்க பாதங் கலப்புறு தொப்பக் கண்டு
குறையற நீடத்தின் மேன்மேற் கொள்ளுது மகிழ்ச்சி யின்றேன்
முறைதபச் சபித்து மென்றான் மொழிந்தது கேட்ட வாலோன். ()

அருளிய படியே செய்வ லையுறே லென்று கூறி
வெருளிய லின்றி யொப்ப மேவிவாழ்ந் திருக்கு நாளின்
மருளியல் கருங்கணுளோர் மங்கைபால் விருப்பம் வைத்தான்
பொருளியன் மேனி மற்றைப் பூவைமார் பொறுமை பூண்டு. (௪)

வையமுற் றிறைஞ்சுந் தந்தை மலரடி வணங்கிப் போற்றி
யையநின் மருகனென்பா னன்றுடம் பட்ட வாறே
செய்புலன் பக்க பாதஞ் செய்வனென் றிறைஞ்சிக் கூற
வெய்யவெங் கோபமூண்டு மேவுமா மதியைக் கூவி. (௫)

மதியெனும் பெயரோய் சொற்ற மாற்றமீ மறந்த னன்றே
முதியவிப் பிழைபொ றுத்தேன் முனிவற வினிமே லேனும்
பொதிசுர ரயன்மால் யாரும் போற்றிடப் பட்ட தாமென்
விதிமறுத் தொழியே லென்று வேண்டவு மறுத்தா னன்றே. (௬)

மறுத்ததை யுணர்ந்து தக்கன் வளரெரி சினந்தா லென்னக்
கறுத்திரு கண்ணுஞ் சேப்பக் கலாநிதிப் பெயரோ யென்சொல்
வெறுத்தலா லின்றுதொட்டுன் மேனிதேய்ந் தொழிக வென்று
ஞிறுத்ததீ வினையை வெல்லு மியல்புடை யாரு முண்டோ. (௭)

ஒழிவருஞ் சாப மேற்றுவ் வொருகலை யாநா டோறுந்
தழிதரக் கண்ட வாலோன் கற்பக மாலை வேந்தன்
வழிமது மலரின் மேலான் மாயவ னிவர்பாற் சென்று
மொழிதலும் பெருமான் பாற்போய் முறையிடு கென்று விட்டார். ()

ஊழியுஞ் சலிப்பொன் றெய்தா வொருபெருங் கயிலை சார்ந்து
வாழிய பெருமான் பாத மலரடித் துணைமேல் வீழா
வாழிய துயரத் தோடு மழுதன னழுத லோடுந்
தாழியல் சடையா னன்னோற் குற்றது சமையக் கேட்டு. (௯)

அஞ்சலை யஞ்சே லென்னு வங்கையா லெடுத்தா லோனைச்
செஞ்சடை முடியில் வைத்தான் றேய்தலற் றுயர்ந்தா னன்னோன்
வெஞ்சினங் கொண்டு தக்கன் விதுவினை யுய்யச் செய்த
மஞ்சனை யழையா னுயோர் மகஞ்செயத் துணிந்தா னன்றே. (௰)

ஒண்குண மில்லா னாகி யுயிர்க்குயி ராகி நிற்கு
மெண்குணச் செல்வன் றன்னை யிகழ்ந்தொரு வேள்வி யாற்ற
லுண்குண மென்று புக்கான் மாமலக் கோட்பட் டார்க்கு
நண்குண மிதுவோ வின்னும் பலவுள நவிற்றுங் காலே. (௧௧)

கற்பக மாலை வேந்தன் கஞ்சநாண் மலரின் மேலான்
மற்பக வளர்ந்த திண்டோண் மாயவன் வான நாட
ரற்பக விளங்கு மோலி விஞ்சைய ராதி யோரைப்
பொற்பகம் பொலியக் கூட்டிப் புக்கனன் யாக சாலை. (௧௨)

அச்சமொன் றேனு மின்றி யனைவரு மொருங்கு சூழ
வெச்சனை துணையாக் கொண்டு மகமினி தியற்ற லோடுங்

கச்சமீ றவத்து மேன்மை யாழ்முனி கயிலை சார்ந்து
நச்சர வணிந்த பெம்மா னகைமலர்ப் பாதந் தாழ்ந்து. (௧௩)

ஐயனே நின்னை யெண்ணு தறிவிலாத் தக்க னென்னும்
வெய்யதீக் குணத்தா னின்னே வேள்வியொன் றியற்றப் புக்கான்
செய்யுமதன் றென்று ராகித் தேவரு மொருங்கு நோக்கார்
வையமுற் றுய்யுமாறு மதித்தருள் செய்தி யென்றான். (௧௪)

மைதியாம் முனிவன் வார்த்தை மாதேவன் கேட்டு நக்குந்
தாவிலா தேடு வெள்விச் சாலையும் படிபா டின்னே
யகெகக் காண்டி பென்று வருளிமியார் நுதற்க ணின்று
மிருவலி படைத்த வென்றி வீரனைத் தோற்று வித்தான். (௧௫)

தோற்றிய வீர னையன் றுணைமலர்க் கமல பாதம்
போற்றிய வணங்கி நின்று புண்ணிய முதல்வா நாயே
னூற்றிய வாங்கும் தேவ லருள்கென நமது பாக
மாற்றிய கருதித் தக்கின் மகம்புரி கின்று னென்றான். (௧௬)

என்றலுஞ் சினந்து பொங்கி யெழுந்துவெங் கணங்க ளோடுஞ்
சென்றுமுன் முழங்கி யார்க்குஞ் சிறுவிதி சாலை புக்கா
னன்றவ ணிருந்த யாரு மடிபுலிப் போத்து நோக்கிக்
குன்றுமான் குழாங்க ளென்னக் குலைகுலைந் தோடி னாரே. (௧௭)

ஓடிய சுரரை யெல்லா மொய்யென வளைந்துக் கொண்டு
கூடிய வாளால் வீசிக் குறைவற தண்டஞ் செய்ய
நாடிய தக்க னோடு நகுதலை யிழந்தா னெச்சன்
பாடிய மதிதேய்ப் புண்டான் பகனகை யொடுகண் போற்றான். ()

அவியுணத் திரட்டு மங்கை யறுப்புண்டா னழலோன் மற்றைச்
சவியுடை யமரர் யாருந் தக்கதண் டங்கள் பெற்றார்
குவிமுலை யனையரீ மாதர் திமைக்கொடுங் கணங்கள் பற்றிச்
செவியுறப் புல்லிப் புல்லித் தீர்த்தன காம நோயே. (௧௯)

இன்னணந் தண்ட மாற்றி யேகினன் வென்றி வீர
னன்னணந் தண்ட முற்ற வமரருட் கதிரோ னென்பான்
பன்னரும் பெருமை சான்ற பரம்பரற் பிழைத்துங் கெட்டே
னென்னுநைந் திரங்கி யேங்கி யிவையிவை நினைய லுற்றான். (௨௦)

...டையரு வ்தரி கிழ லமர்ந்தபார்ப் பதிம ஞாளன்
கொடையருக் கோயில் சார்ந்து கோபுர முன்பு தாழ்ந்தார். (சச)

விழிகளி ரருவி பாய மென்கரந் தலைமேற் கூம்ப
வொழிதரா வன்பு பொங்க வுட்புகுந் தவப்பிற் சூழ்ந்து
பழிபடு மலங்கண் மூன்றும் பாழ்பட வின்பம் பொங்க
வழிமந்து நறும்பூங் கொன்றை மாலையான் திருமுன் சென்றார். ()

கண்டனர் மாய ளுதிக் கடவுளர் கஞ்றுத் தேலவ
விண்டனர் கவலை யெல்லா மேனிமேற் புளகப் போர்வை
கொண்டனர் நெஞ்ச நெக்குக் குழைந்தனர் கண்ணீர் வார
வண்டர்தம் பிரானார் காட்சி யழகிய தென்று நின்றார். (சசு)

முழுதுண ராதி சைவ முனிவர ளொருவன் போந்து
பழுந்துறு வில்வங் கொண்டு பற்பல பெயருங் கூறித்
தொழுதகு தாளிற் சாத்தித் தூகவே தனமுஞ் செய்து
கெழுதகு பளிதத் தீபங் கிளர்தரச் சுழற்றிப் பின்னர். (சஎ)

இலகுவெண் ணீறு நல்க வெண்ணரும் விருப்பி னேற்றுத்
திலகநன் னுதலிற் பூசித் திருத்தகத் தொழுது பின்ன
ரலகில்பே ரருளான் மிக்க வம்மைசந் நிதியும் போந்து
குலவுபோற் றுவந்து நீறு கொண்டுபே ரின்ப முற்றார். (சஅ)

நண்ணிய புலவர் யார்க்கு நலமலி வசதி நல்கிக்
கண்ணிய வமுதுங் குய்சால் கறிகளுஞ் சிற்று ணவு
மெண்ணிய நெய்யும் பாலு மின்னுமுள் ளனவுங் கொண்டு
புண்ணிய மன்னர் மன்னன் பொலிதர வூட்டி னானே. (சகூ)

கப்பூரங் கலந்த சாந்தக் கமழ்நறுஞ் சேறு பூசி
வெப்பமுற் றொழியச் செய்த விரைநறு நீரிற் றோய்த்த
வொப்பில்பூ மாலை சூட்டி யொருங்குபல் வாசங் கூட்டுந்
திப்பிய விலைகாய் நல்கிச் செய்தனன் மகிழ்ச்சி மேன்மேல். (ருo)

மெல்லிழைக் கலிங்கம் பொன்செய் மென்றுகி றலைச்சாத் தாதி
நல்லிழைத் துகில்கண் மூற்று நகுகதிர் மதாணி யாதி
யெல்லிழைத் தொடுத்த தாமங் குழைமுத லெல்லாம் பூணுங்
கல்லிழைத் தமைத்த மற்றுங் கவின்பெற நல்கி னானே. ()

காவலன் முகமன் கண்டு கயற்கொடி யுயர்த்த செங்கை
மாவல னாய செங்கோல் வழுதியை மறந்தார் கொன்றைப்
பூவலர் வேணிப் பெம்மான் றரிசனப் பொலிவு கண்டு
நாவல ராலவாயி னம்பனை மறந்தா ரன்றே. (௫௨)

காலத்திற் சிவபி ரானைக் கண்டிறைஞ் சுதலுங் கொண்ட
சீலத்திற் றத்தம் பூசை செய்தலும் புனித மாய
கோலத்தி னமைந்த நல்லூண் கோடலுங் கலைகள் யாவு
மூலத்தி னுணர்பின் மன்னோ டாய்தலு முயன்றி ருந்தார். (௫௩)

பன்னாளிவ் வாறு செல்லப் பாவல ருறுநா ளோர்நாட்
பொன்னான மணிமா டஞ்சூழ் பொங்கெழி லால வாயின்
மின்னார்செஞ் சடில மோலி விமலனார் தமைநி னைந்தா
ரெந்நாள்சென் றிறைஞ்சு வோநம் மிறைவனை யென்று நைவார்.

அங்கயற் கண்ணி யோடு மாலவா யமர்ந்த மூர்த்தி
பங்கயப் பாத மென்று பணிவது கனக கஞ்சக்
கொங்கலர் வாவி யென்று குடைவது பன்னா ளிங்கே
தங்கின மென்று நெஞ்சந் தளர்ந்துநெக் குருகு வாரால். (௫௫)

வேறு.

வெருவால மெழுதலோடு மெய்ந்நடுங்கி யயனெடுமான்
மருவால நிழலமர்ந்தாய் மாற்றுகென விதுநமக்குச்
சருவாலென் றெடுத்தயின்ற தாவாத பெருங்கருணைத்
திருவால வாயுடையான் சேவடிகண் மறந்தனமால். (௫௬)

வெருக்கூடும் படியெழுந்து விரிந்தபுவ னம்புவன
வுருக்கூடு குலைப்பதுதேர்ந் தும்பரெலா மோலமிட
மருக்கூடு செஞ்சடைமேல் வாங்கியமைத் துலகளித்த
திருக்கூட லுடையபிரான் சேவடிகண் மறந்தனமால். (௫௭)

பொருமியலு மொருபுலவன் பொருட்டாக வருள்கூர்ந்தே
திருமதிர வதிர்த்தெழுமழங் கொருகடாப் பகடுகைத்து
வருமறலி யுயிர்மாள மலரடிசற் றேயெடுத்த
திருமதுரா புரிப்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௫௮)

ஒழுங்குபட வண்டுகிண்டு யுறுசுவைய கழைகோட்டி
யெழுங்குறிசின் மலர்க்கலைதொட் டெய்யுமுன மெழிலிரதி
யழுங்கும்வகை யவனவிய வழல்விழிசற் றேதிறந்த
செழுங்கடம்பி னடிப்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௫௯)

பொருத்தமுற மூழ்குநர்தம் பொல்லாங்கு முழுதொழிந்துக்
கருத்திலர்த்தி மலமாயை கன்மமிரி தரப்போக்கி
யருத்திமிகு பேரின்ப மருளொருபொற் றாமரைநீர்த்
திருத்திலத்து முளைத்தபிரான் சேவடிகண் மறந்தனமால். (௬௦)

இந்திரனார் பழிகழுவி வெள்ளானை யிப்புவிநீத்
தந்தரநா டுறவருளி யணிநகரந் தகக்கண்டு
சுந்தரப்பொற் றடாதகையார் தோற்றவருள் புரிந்தமருஞ்
செந்தளிர்மே னிப்பெருமான் சேவடிகண் மறந்தனமால் (௬௧)

தாவாத பேரழகிற் றடாதகையை மணந்தமர
ராவாவென் றேத்தவெள்ளி யம்பலத்திற் கூத்தாடி
யோவாத பெருமைசா லொருகுறளுக் கன்னமிட்ட
தேவாதி தேவனிரு சேவடிகண் மறந்தனமால். (௬௨)

கூவொலிசெய் குறட்கன்னக் குழியொடுவை யையுமழைத்துப்
பாவொலிசெ யெழுகடலும் பாண்டியனும் வரக்கூவி
யேவொலிசெய் தனுவாங்கு முக்கிரனை யருள்புரிந்த
சேவொலிசெய் கொடிப்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௬௩)

மைந்தனுக்கு வேல்வளைசெண் டுதவிவா ரிதிசுவற
விந்திரன்பொன் முடிதகர வளைகுலைய வெய்துவித்துச்
சந்தமுறைப் பொருளுரைத்து மணிபகர்ந்து தழைந்தடியார்
சிந்தையிடத் தமர்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௬௪)

வருணன்விடு கடல்சுவற்றி வளநகர்மேன் முகிலேவிப்
பொருவருசித் தாய்க்கரும்பு கல்லானை வாய்ப்புகட்டி
வெருவருவே ழந்தடிந்து விருத்தனா தியராய
திருவளர்பே ரருட்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௬௫)

மாறிநடம் புரிந்துவழி யஞ்சினா பாதகந்தீர்த்
தேறியமு ரங்கமரிந் தெயிற்றுவிட நாகமொடு

சிறியமா யப்பகவைத் திர்த்துமெய்க்காட் டிட்டமருஞ்
சேறிகழ்கட் டுமைபாகன் சேவடிகண் மறந்தனமால். (௬௬)

சிறியருளி வலைவீசிற்றெண் சித்திகளுங் கொள்வித்துப்
பறிவில்லிடைக் குறிபொறித்துத் தண்ணீர்ப்பந் தருமவைத்தி
மொழியியக்க வாதஞ்செய் தாருமேள முகிழ்ப்பவமர்
செறியர்குலக் கொழுந்தினிரு சேவடிகண் மறந்தனமால். (௬௭)

ஒருவனவன் றனைமடுவிற் புகுந்தியுல வாக்கோட்டை
யருளியருண் மாதுலனாய்ச் சிவலோக மதுதெரித்துப்
பெருவிறகு சுமந்துதிரு முகங்கொடுத்துப் பெரும்பலகை
திருவுறவிட் டருள்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௬௮)

இசைவாது வென்றருகுழ வெறாமிகட்கு முலைகொடுத்தாங்
கசையாமக் கிராக்கிக் கரிக்குருவி யமர்நாரை
வசைதிர வருளியரா வனந்துணர்ந்த வருள்புரிந்த
திசையாடை யுடையபிரான் சேவடிகண் மறந்தனமால். (௬௯)

தன்னுடைப்பே ரயிபெய்து தந்தைதமக் குப்பலகை
மின்னுடைப்பொற் கிழியளித்து வெகுள்கிரற் கனியேற்றிக்
கொன்னுடைய விலக்கணமுங் கொளுத்தியுறு கலாந்தீர்த்த
தென்னுடைய தென்னவன்பொற் சேவடிகண் மறந்தனமால். (௭௦)

முளம்புலர்ந்த விடைக்காடன் முற்றுவகை கொளவருளிச்
சகம்பயந்த தாயான கயற்கண்ணா டன்றேடு
மிகப்புகழ்ந்து கொண்டாடு மிந்திரமா னத்தமருந்
திசைந்தவருட் பெருமான்பொற் சேவடிகண் மறந்தனமால். (௭௧)

என்றுகளிக் துள்ளுருகி யிவ்வாறு புலவரெலா
நின்றுமேது வாயையடைவோ நாளெனா மென்றிருந்தார்
வென்றுமினிர் மன்னவனு மிவர்போலும் விருப்புற்று
வன்றுகன விடைச்சொக்கு யமலசெழுந் தருள்செய்வார். (௭௨)

அவ்வாயி லுடைக்காழு மழகியநந் திருக்கோலஞ்
சாலநீ ரிவ்விடத்தே தரிசிப்பா னருள்செய்வோங்
கோலமீர் தருகடம்புங் குளிர்பொற்றா மரைத்தடமுஞ்
சிலமார் செய்கையினீர் சிறந்தசான் றதற்குணர்வீர். (௭௩)

அந்தமா கலத்தினுமித் தலத்தினதி விருப்பமுள்ளோ
மெந்தமா தலங்களுமித் தலமொவ்வா வெனத்தெளிமின்
சுந்தரே சுரரெனும்பேர் சொல்கவின்று முதனமக்குக்
கந்தமார் குழற்குவளைப்பிர் கயற்கணு ளெனுநாமம். (எச)

திருவிழா முதலாய சிறப்பெல்லா மத்தலம்போற்
குருவிழா வகைநடத்திக் கொடிவாரு மென்றியம்பிப்
பெருவிழா விருதிறக்குப் பெரியோர்க்கு மருள்புரிந்து
மருவிழா மலர்க்கொன்றை மாலையா ருருக்கரந்தார். (எரு)

விழித்தனர்க ணிருதிறத்து மேலோரு முளக்கவலை
யொழித்தனர்தங் கனுவிலையை யொருவரொரு வரிற்பேசிக்
கொழித்தனர்பே ரருளிருந்த படியென்னே யெனக்கூறிச்
செழித்தனர்மா மதுரைநகர்ச் செலவொழிந்தார் விடிவுணரார். ()

விடியலுணர்ந் தெழுந்தொருகை வெஞ்சூலப் படையாளி
கடிமதிற்கோ யிலையடுத்தார் கனகதா மனைபூத்து
வடிமதுவாய் வைத்தருந்தி வண்டுபா டிசையுடைத்தாய்
முடிவிலொரு பெருந்தீர்த்த முன்பொலியக் கண்டனரால். (எஎ)

தென்னூல்வளை யில்லாத நிறைதருநீ ரிப்பொய்கை
யின்னலற ஆலயமுன் னிருந்தவா றென்னென்பார்
பன்னரிய புகழ்ப்பரமன் பகர்ந்தபடி யேயிருப்ப
தென்னவதி சயமென்பா ரியம்பரிதித் திறமென்பார். (எஅ)

ஆனந்த மூழ்குநர்போ லத்தீர்த்தப் புனன்மூழ்கி
யானந்த வெண்ணீறு மக்குமணி யும்புனைந்தே
யானந்த மயமான வைந்தெழுத்து மனத்தெண்ணி
யானந்தர் தனிபுகுவார் மூன்றென்று மதிகரத்தே. (எகூ)

நெடியகோ புரமுன்பு நிலசிறந்தோய் தரப்பணிந்து
கடியமதில் புடையுடுத்த கனகநகரி யுட்புகுந்து
பொடியணிமே னியர்பிரதக் கணம்புரியும் பொழுதொருபால்
வடியுலர்துன் றிபிகடம்பு வயங்குபுகிற் பதுகண்டார். (அ0)

கண்டவுடன் றொழுதெழுந்தார் காமருவும் பூந்தருவைத்
திண்டருமன் புறக்கட்டித் தழுவினர் நெட்டுயிர்த்தார்.

பண்டமிலில்விழ் மலரெல்லாம் வாரிவிழி யொடுசேர்த்தா
ரண்டர்பிரான் றிருவருண்மற் றளப்பரிய தாலென்றார். (௮௧)

சொல்லரிய வன்பகத்தே துளும்பவிறை யவன்றிருமுன்
வெல்லரிய மகிழ்ச்சியொடு மேவினார் பணிந்தெழுந்தார்
கல்லரிய மலக்கிழங்கு கழிந்ததுபோ யொழிந்தென்றார்
புல்லரிய துதியெடுத்துப் புகழ்ந்துபா டுவரானார். (௮௨)

மாளாத மனத்தொளியாய் வயங்குமொரு பேரொளியே
மீளாத கொடுந்திரிவார்க் கெஞ்ஞான்று மொளிப்பவனே
நூலாத மலக்கிழங்கு நூன்றெடுக்கும் பெருவலியோய்
தோலாத பெருங்கருணைச் சுந்தரே சுரசரணம். (௮௩)

மலமாயை கன்மமெனு மாசுமூ டியவடியோர்
நலமாய பேருணர்விற் றலைப்பட்டு நயமுணர்வா
னிலமாய தேரேறி நெடும்புரமூன் றெரித்திடும
துலமாய பேரருள்செய் சுந்தரே சுரசரணம். (௮௪)

ஒல்லாத பிறவியடைந் திருவினைக்கே யுடம்பட்டுக்
கல்லாத கொடியேமாய்க் கசட்டறிவின் மூழ்காமல்
வெல்லாத மெய்ஞ்ஞான வெளிமருவ வளவிட்டுச்
சொல்லாத பேரருள்செய் சுந்தரே சுரசரணம். (௮௫)

காற்றியொரு மலமூன்றுங் கழலடைதற் கொல்லாத
வாற்றியிறப் பொடுபிறப்பு மடைவேங்கள் கரிசனைத்து
நீற்றியரு ளுதற்பொருட்டு நீர்த்தடமுஞ் சீர்க்கடம்புந்
தோற்றியரு ளியபெருமைச் சுந்தரே சுரசரணம். (௮௬)

ஒன்றாகிப் பலவாகி யுருவாகி யருவாகி
யன்றாகி யின்றாகி யருளாகி மருளாகி
நன்றாகித் தீதாகி நான்மறைச்சென் னியுமளவாத்
தொன்றாகிப் புதிதாய சுந்தரே சுரசரணம். (௮௭)

என்றுபல வாறுதுதித் தெம்பிரான் பெருங்கருணை
யொன்றுமளப் பரிதாலென் றொழியாத வின்புற்று
நன்றுமதி ராபுரியி னுங்காணுங் கோலமே
யின்றிவர்தந் திருக்கோல மென்றுதொழு தெழுந்துபோய். (௮௮)

[illegible]லுயிரு மினிநின்ற பார்ப்பதியா லயமடைந்தார்
செல்லுலவு பொழின்மதுரைத் திருக்கோயில் வீற்றிருக்கு
மெல்லுலிவார் பெருங்காட்சி யியைந்தவரும் வீற்றிருந்தா
ளெல்லுலவாக் கண்டத்தா ரடைந்தவடி வினுக்கேற்ப. (௫௯)

புயல்புரையொண் கருங்குழலும் பூரணசந் திரமுகமு
முயல்புரையா ருயிருமுற வொளிரிருகோ டியுமயி
லியல்புரைசா யலும்வனப்பு மிலவ்புரை கனிவாயுங்
கயல்புரைகண் களும்பிறவுங் கண்களிப்பக் கண்டார்கள். (௬௦)

மயற்கண்ணுள் வழிபாடு மருதபுரி யன்பினர்பா
லுயிற்கண்ணு ளலளாகி யளப்பரிய பேரின்பச்
செயற்கண்ணு டொறும்பருகத் தீராது பெருகுவிக்குங்
கயற்கண்ணு டிருவுருவுங் கண்டுதொழு தின்புற்றார். (௬௧)

பொன்னியரு மறைத்தடமும் பூப்பொலியு மொருகடம்பு
மின்னியல்செஞ் சடையார்தம் விளங்கருளாற் றோன்றினமை
மன்னியல்பி னெத்தலத்து வாழ்வாருந் தெரிந்துவகை
துன்னியல்பிற் சூழ்ந்துற்றுத் தரிசித்துத் தொழன்முயன்றார். (௬௨)

மாமதுரா புரியகத்து வாழ்வாரு மிதுகேட்டுக்
காமருநன் சூழ்நகர் கலந்திரண்டுங் கண்ணுற்றுத்
தாமநறுஞ் சடையிருவர் தமைப்போற்றி யிருதிறத்து
நாமகள்சால் வாழ்க்கையர்க டமையுநயந் தேத்துவார். (௬௩)

மண்ணவர்க ளிவ்வாறு மாறுது களிப்படைய
விண்ணவர்கள் கற்பகத்தின் மேவுபூ மழைபொழிந்து
சண்ணவர்க ளாயினர் கரிசமைமுக் குறும்பெறிந்தே
பண்ணவர்கண் மிகவந்து பரவுவார் பண்பமைய. (௬௪)

துன்றுபெருங் கருணையுடைச் சுந்தரே சுரரென்றுங்
கன்றுதலி லாதிருளங் கயற்கண்மட மாதென்று
மன்றுமுத லிருவருக்கு மாகியவித் திருநாம
மென்றுமிவை [illegible]ப்பவர்க ளெண்ணியவெ லாமடைவார். (௬௫)

[illegible]யபொற் றாமரைநீர் [illegible]குத்தவிதிப் படியாடித்
[illegible]ன்னியவண் பெருங்கருணைச் சுந்தரநா தன்பதமு

மின்னியவங் கயற்கணுமை மென்பதமுந் தரிசிப்போர்
பன்னியவிப் புவியாண்டு பண்ணவராய் விடுறுவார். (கூசு)

எண்ணரிய பெருமகிழ்ச்சி யெய்தியமற் றிருவோருங்
கண்ணரிய சுந்தரனைக் கயற்கணுமை யைப்போற்றிப்
பண்ணரிய தொழில்வாய்ந்து பரவியதம் மிடம்புகுந்தார்
நண்ணரிய கிழமையுறு நட்டின்மிகக் கலந்தம்மா. (கூஎ)

நன்றுபொலி தருமொருநா ளொருபுலவர்கண் மிகமகிழ்வுற்
றன்றிவனே யரியினக்கா லேம்பதுபோர் சங்கத்தா
ரென்றுசொலும் படியாமே யென்றுபுனைந் திருஞ்சூளை
யொன்றுவிச யாலயனைப் பாடினரொரு வெண்பா. (கூஅ)

பாடியவெண் பாக்கேட்ட பார்த்திபனு மிகமகிழ்ந்து
கூடியவன் புறவெழுந்து கும்பிட்டுக் கூடத்தாடி
நாடியயான் பெரும்புலவீர் நான்றரமோ விதற்கென்று
நீடியபல் லுபசார நிரப்பினனவர்மகிழ. (கூகூ)

ஆவணிமூ லத்திருநா ளமுகியசித் திரைத்திருநா
ளாவணிதைப் பூசமென நவிலாடிப் பூரமெனப்
பாவணிநற் பெருந்திருநாள் பரவுறுமற் றைத்திருநாண்
மாவணியிற் சிறப்பித்துச் சுந்தரற்கு வயக்கினன். (க00)

இனையசிறப் பிற்பலநா ளிவ்வாறு பணிசெய்து
நனையநறு மலர்ப்பைந்தார் நயந்தவிச யாலயனு
மினையவரும் புலவர்களு மிறைகருணைச் சுந்தரர்தம்
புனையவரு மலரடிக்கீழ்ப் புக்களவா வின்புற்றார். (க0க)

சங்கப்புலவர் பூசித்தபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் சஅச.

---

# திருமால்பூசித்த படலம்.

எங்கு மாகி யிலங்குஞ் சிவபிரான்
பொங்கு பேரரு ளாற்புர வுற்றவன்
சங்கு சக்கரந் தாங்குந் தடக்கையான்
கொங்கு தங்கு துழாயணி கொண்டலே. (க)

வெய்ய தானவர் வீறு குலைக்கவுஞ்
செய்ய வானவர் செய்கை நிரப்பவு
மைய நெஞ்சுட் குறித்தருள் வாங்குவா
னைய கன்ற வளத்தலந் தேருவான். (உ)

வீரை வாய்த்துயின் மேவி நறுந்துழாய்த்
தாரை யாதரிக் குந்தடந் தோளினன்
காரை மேற்கொண் டிலங்குங் கரும்பொழிற்
சூரை மாநகர் துன்னின னென்பவே. (ங)

வுண்ணு மாறெழில் சார்திருக் கோயிலு
நண்ணு பொற்று மரைநறுந் தீர்த்தமுங்
கண்ணு தெய்வக் கடம்பும் வதரியு
முண்ணு மேன்மை யனைத்துந் தெரிந்தனன். (ச)

மேலு மேலும் விருப்பம் வளர்ந்தெழச்
சாலும் பொற்று மரைத்தடந் தோய்ந்தனன்
கோலும் வெள்ளிய நீறுங் குரூஉச்சுட
ராலுங் கண்மணி யும்மணிந் தானரோ (ரு)

நந்து வன்னமோ ரைந்து நவிற்றினன்
வந்து கோபுர வாயிலிற் றாழ்ந்தனன்
சிந்து தீவினை யேனெனச் சிந்தைசெய்
தந்து கோயிலி னுட்புகுந் தானரோ. (சு)

ழுந்தி மூன்று வலஞ்செய்து மொய்கழ
னுந்தி பாற்சென்ற னன்விடை பெற்றன

னந்தி வண்ணத் தமலன்முன் சென்றன
னுந்தி நூக்தவ னென்னு மொருவனே. (எ)

மன்னு பொற்கு மரைப்புன லாட்டினன்
மின்னு சாந்தம் விரவமெய் கூட்டினன்
றுன்னு பன்மலர் வில்வமுஞ் சூட்டினன்
முன்னு வாச முழுப்புகை கோட்டினன். (அ)

உற்ற மேன்மை யமுதமு மூட்டினன்
முற்ற மற்றை முகமனுஞ் செய்தபின்
செற்ற மோவு திருமுன் குடந்தமுற்
றற்ற நீங்க வறைவன் றுதியரோ. (கூ)

கால காலமுக் காலமுந் திரந்தவ
சூல மேந்திச் சுடர்திருப் பாணிய
வால மாந்து மருட்பெருஞ் சேவக
பால லோசன நின்னடி பற்றினேன். (க0)

முழுது மோர்ந்த பவமுழு தாயவ
கழுது சால்பெருங் காட்டி னடிப்பவ
பழுது தீரப் பரந்தநின் சேவடி
தொழுது வேண்டித் துதிப்ப னடியனேன். (கக)

முத்த னேமுதல் வாமுழு மாதவர்
சித்த னேசிவ னேசெஞ் சடையணி
மத்த னேவத ரித்தரு நீழல்வா
மூத்த னேயடி யேனுன் னடைக்கலம். (கஉ)

கண்ண லேது மிலேனுன் கழலன்றிப்
பண்ண லேது மிலேனுன் பணியன்றி
நண்ண லேது மிலேநின் னலனன்றி
யண்ண லேயடி யேனுன் னடைக்கலம். (கங)

போற்றி லேனின் பொலங்கழ னின்பணி
மேற்றி லேனின் னெழுத்தைந் தினையுமுட்
சாற்றி லேனத னைக்கொடுந் தானவர்க்
காற்றி லேனடி யேனுன் னடைக்கலம். (கச)

என்று தோத்திரஞ் செய்திறைஞ் சிப்பெயர்
தொன்று சேற்க ணுமையவண் முன்செலீஇ
நன்று போற்றி நகுமலர் தூய்ப்பணிந்
தூன்று மாயவன் பின்னரிஃ தாற்றினுன். (கரு)

நாய கன்றளித் தென்றிசை நண்ணியே
சேய மேனிச் சிவலிங்க மொன்றனைப்
பாய வன்பிற் பதிட்டை புரிந்தனி
தூய தீர்த்தமொன் றுவயிற் றொட்டனன். (கசு)

விண்டு போக வினைதன் பெயரினால்
விண்டு வீசன் மிகப்பொலி வெய்திடும்
விண்டு தீர்த்த மெனப்பெயர் விண்டனன்
விண்டு பூசனை யாற்றுதன் மேயினுன். (கஎ)

அன்ன தீர்த்த முகந்தினி தாட்டுபு
பன்ன மோடு பலமல ருங்கொடு
முன்ன வன்றிருப் பூசை முடித்தனன்
சொன்ன வாடை யுடுத்திய தூயனே. (கஅ)

இந்த வாறுபன் னாளங் கினிதிருந்
தந்த மில்லா வருந்தவ மாற்றுழிக்
கந்த வோதிக் கயற்க ணுமையொடு
மூந்த வந்தனன் முக்கண் முதல்வனே. (கக)

ஐயன் காட்சி கொடுத்த தறிந்துகார்
மெய்யன் போற்றி விரும்பி யெதிர்நின்றுன்
செய்ய நின்றவச் செய்கை யுவந்தன
மைய னீங்கு வரம்பல கொள்ளென்றுன். (உ0)

வெய்ய தானவர் வெவ்வினை விட்டவுஞ்
செய்ய வானவர் செய்வினை நாட்டவு
மைய னேயடி யேற்கு வரமருண்
மெய்ய வின்னுமோர் விண்ணப்ப முண்டரோ. (உக)

இந்த மாதலந் தெய்தி யடியனேன்
சந்த மாரப் பிதிட்டைசெய் சப்புவை

நந்த வாவு நறும்புனற் பொய்கையை
முந்த வாதரிப் பாரெண்ண முற்றுக. (உஉ)

அன்ன தூய சிவலிங்கத் தையமீ
பின்ன மின்றிப் பிறங்கி யமருக
வின்ன மாதலத் தேயடி நாயினேன்
மன்ன வேண்டும் வழங்குதி யாலென்றான். (உங)

என்று வேண்ட லு மீத்தகமக்குநீ
யொன்று மேற்றிசை வைகுதி யுன்பெயர்
நின்று கண்ணிறைந் தானென்பர் ஞாலத்தார்
கன்று கொண்டு கனியுகுத் தாயினும். (உச)

உன்னை யேத்துந ருன்பத மெய்துக
பின்னை கேள்வ பிறங்கநீ பூசித்த
வென்னை யேத்துந ரென்னை யுறுகவென்
றன்னை யோடு மறைந்தன னையனே. (உரு)

சென்று தானவர் சேட்டை யடக்கினு
னன்று வானவர்க் கோலஞ் செய்தன
ஞென்று மேற்றிசை யுற்றமர்ந் தான்குணில்
கன்று கொண்டவக் கண்ணிறைந் தானரோ. (உசா)

வாசு தேவன் வழுத்திய காதையை
யாசு நீர வறைந்தன மாற்புவி
பேசு மத்தல மேன்மையும் பேசுவோம்
பூசு நீற்றிரென் றுன்புகல் வானரோ. (உஎ)

திருமால்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ருகக.

---

# தலவிசேடப்படலம்.



துன்னிய சடில மோலிச் சுந்தரே சுரர்க்கு நாளு
மின்னிய கயிலை மேரு விண்டவழ் பொழிற்கோ கன்னம்
பன்னிய காஞ்சி காசி பருப்பதஞ் சேறூ வுள்ளு
மன்னிய வுவப்புச் செய்யு மலிவளம் பொலியுஞ் சூளை. (க)

அன்னமா தலத்து நாளும் வசிப்பவ ராயு ளிடிப்
புன்னெருஞ் செல்வ மேவிப் பண்புடை மனைவி மக்க
ளொன்னரும் பொலிய வாழ்ந்து மறுமையி லிமையோ ராகி
நன்னலந் துய்த்து நம்மான் மலர்ப்பத நண்ணி வாழ்வார். (உ)

வேதகு விரதம் வேண்டா விரிந்தகா னுதி புக்கு
மாதவ மியற்றல் வேண்டா வாரிசூழ் புடவி யேத்தக்
காதர மொழித்து நாளுங் கலந்தவர்க் கின்ப நல்கு
மாதரம் பயக்குஞ் சூளைத் தலனமர்ந் திருத்தல் போதும். (ங)

வளமனை வேண்டி னேரு மகநலம் வேண்டி னேரு
முளமிகு போக மெல்லா முற்றிட வேண்டி னேருந்
தளர்வரு தெய்வ போகஞ் சார்தர வேண்டி னேருங்
களமினம் பெருமான் மேய சூளையே கலத்தல் வேண்டும். (ச)

நித்தியங் கங்கை மூழ்கி நிகரிலாக் காசி மேய
வுத்தம விசுவ நாதன் றரிசன முவப்பிற் செய்து
பத்தியிற் பின்னு ளெங்கு மேவலாற் படைக்கும் பேறு
வித்தகச் சூளை யோர்நாண் மேவினர் படைப்பர் மாதோ. (ரு)

ஆதலிற் சூளை யென்னு மருந்தல வாசஞ் செய்தல்
காதலி னெவர்க்கு நன்றாங் கலந்தமர் தரமுற் றேன்
மேதகச் சின்னா ளேனும் விரும்பியாங் குறைதல் வேண்டு
மோதல்செய் ததுமுற் றின்றே லொருதின மேனுஞ் ச[illegible] (சா)

அன்னது முற்று தென்னி னத்தல மார்க்க மேனு
மென்னருஞ் சேறல் வேண்டு மிஃதெப்புண் ணியத்தின் பேறு

முன்னருஞ் செல்வ மேவி மறுமையி னும்ப ராகிப்
பன்னரும் போகந் துய்த்துப் பரகதி யடைவர் பின்னர் (எ)

துலங்கிய புகழ்சால் சூளைச் சுந்தரே சுரருக் கென்று
நலங்கிளர் விளையுள் வாய்க்கு நன்னில நகரமொன்று
பலங்கொள நல்கு வாரேற் பார்முழு வதுநன் காண்டு
வுலங்கொளச் சிவலோ கத்தின் மருவிவீற் றிருப்ப துண்மை. (அ)

துங்கயற் கன்னி யோடு மருட்பெருஞ் சூளை மேய
நங்கடம் பெருமாற் கன்பி னலமலி பொழில்க ளாக்கிப்
பங்கமின் றுதவு வாரேற் பண்ணவ ருலகஞ் சார்ந்து
கொங்கலர் கற்ப கப்பூங் குளிர்நிழ லிருந்து வாழ்வார். (கூ)

பொங்கொளிச் சூளை நாதன் பூசையைச் சிறப்பிப் போருஞ்
செங்கண்மான் முதலோர் போற்றத் திருவிழாச் சிறப்பிப் போரு
மெங்கணும் பகைவ ரின்றி யிரும்புவி முழுது மாண்டத்
திங்கள்வே ணியர்தஞ் செல்வச் சிவலோக மருவி வாழ்வார். (க0)

பெருகொளிச் சூளை நாதன் பிறங்குமா லயத்தி னுள்ளான்
மருவுறத் தீபஞ் செய்வோர் மற்றுள பணிக ளெல்லா
மருகுற விருப்பிற் செய்வோ ரனைவரு மவன்சா ரூபந்
திருவுறப் பெற்று வானோர் சேவிக்க வாழ்வ துண்மை. (கக)

நலமலி சூளை மேய நாயகன் முடிமே லான்பால்
வலமுற மற்று நூலில் வகுத்தன சிறப்ப வாட்டிக்
குலமலர் வில்வஞ் சூட்டிக் கும்பிடு மேன்மை பெற்றோர்
அலர்தர வடையும் பேற்றை யறைதர வல்லர் யாரே. (கஉ)

சுந்தரே சுரர்க்குஞ் சேற்கட் சுந்தரி தனக்கு நாளு
நந்தலில் நெய்வி ராய நல்லமு தினிய தீம்பா
லந்தமில் கறிமுன் னாக நிவேதிப்போ ரடையும் பேறு
பந்தமின் முனிவீர் பூமேற் பனவற்குஞ் சொலமுற் றாதால். (கங)

சூற்றுசெங் கதிரோன் றீர்த்தந் துலங்குபொற் கமல தீர்த்த
மேற்றமார் விண்டு தீர்த்த மென்றுசொற் றிடுமோர் மூன்று
மாற்றருங் கருணைச் சூளை வள்ளலார் முக்கண் போலு
மாற்றல்சா லிவற்று ளொன்றிற் றோய்பவ ரமர ராவார். (கச)

சுந்தரர் முடிமேற் சாத்தச் சூரைமா நகரி னுள்ளா
லந்தன வனங்கள் வைப்போர் நலமலி பொற்பூ ணுடை
யந்தமிலவருக் கிவோ ரமீரா யரம்பை மாதர்
சந்தமென் முலைமேற் றுஞ்சுந் தவாப்பெரும் போகந் துய்ப்பார். ()

திருமதி லர்தி யாய பணிகளைச் சிறப்பச் செய்தும்
பொருவறக் கிலமாயுற்ற பணிகளைப் பூநிய செய்து
மருமையிற் சூரை நாதற் கன்புவைத் திறைஞ்சு வாரேற்
பெருநுதல் கிளைகள் சூழப் பிறங்கிவாழ்ந் தமர ராவார். (கசு)

துதிமிகு சுந்த ரேசர் சூரைமா நகரி னுள்ளான்
மூதிமிகு மறைய வர்க்கோர் மனைபுரிந் துதவு வாரு
மதிநல மடங்கண் மற்றை யடியவர்க் குதவு வாருங்
கதிநலங் காணி யாகக் கயிலையே மருவி வாழ்வார். (கஎ)

சுந்தரர் திருமுன் னாகத் துடியிடைக் கயற்க ணம்மை
சந்தமார் திருமுன் னாகச் சத்திர மொன்றுண் டாக்கி
யந்தமின் மறையோர் மற்றை யடியவ ருண்ணு மாறு
முந்தநன் கமுது நல்கு மவர்பயன் மொழியற் பாற்றோ. (கஅ)

சூரையை நினைத்தோ ரீற்றிற் றுன்னுவர் சிவசா லோகஞ்
சூரையைக் கண்டோ ரீற்றிற் றுன்னுவர் சிவசா மீபஞ்
சூரையைத் தொழுதோ ரீற்றிற் றுன்னுவர் சிவசா ரூபஞ்
சூரையில் வசித்தோ ரீற்றிற் றுன்னுவர் சிவக்க லப்பே. (கக)

சூரிய தீர்த்த மூழ்கித் துலங்கவக் கரைமேல் வைகுஞ்
சூரிய மூர்த்தி பாதந் தொழுபவ ரனைய தெய்வச்
சூரியன் றேசு வாய்ந்து தொக்கபல் போகந் துய்த்தச்
சூரியன் பதத்து வாழ்வார் துரிசில ராகி யென்றும். (உ0)

சூரைமேற் றிசையின் மேவித் துலங்குகண் ணிறைந்தானென்னும்
வீரைபோ னிறைத்தி னனை மேதகப் போற்று வோர்கள்
பாரையா தரிப்ப வாண்டு படர்கிளை சூழ வாழ்ந்து
சீரைவா யனையிறை றெய்வ வைகுண்டஞ் சேர்ந்துவகழ்வார். ()

அன்னமா தலத்தின் மேய வலரியை யரியைத் தாழ்வோர்க்
கின்னமா பலனுண் டாமே லிவர்க்கருள் வழங்க நிற்கும்

பன்னகா பரணச் சுந்த ரேசரைப் பாக மேவு
நன்னர்வான் கயற்க ணாளைப் பணிபவர் நலமெற் றுமால். (உஉ)

பற்பல வுரைப்ப தென்னே பண்புசான் முனிவீ ரந்தச்
சொற்படி சூளை மேய சுந்தரப் பெருமான் றாளுங்
கற்பியர் சிறப்பு வாய்ந்த கயற்கண யகிபொற் றாளு
மற்புறத் தியானஞ் செய்த வனைவர்க்குஞ் சிறந்த பேறும். (உ௩)

அந்தல மேன்மை யின்னு மளவில வாகு முற்ற
வந்தல மேய சுந்த ரேசனே யறைய வல்லா
னிந்தலம் பொருவ திந்த வகலிடத் தில்லை யின்னே
யத்தலம் பணிவோ மென்று ரைரு ளிறைந்த சூதன் (உ௪)

உரைத்தது கேட்ட லோடு முவகையங் கடலு ளாழ்ந்து
புரைத்தவவ் வேள்வி முற்றிப் பொருக்கெனப் போந்து முத்தங்
கரைத்தலை யொதுங்குஞ் செம்பொற் கமலநீர் படிந்தி யாரும்
வரைத்தடஞ் சிலையான் கோயில் புக்கனர் மகிழ்ச்சி பொங்க. ()

முனிவரர் நந்தி யண்ணல் முன்பணிந் தெழுந்து சூழ்ந்து
தனிவரு சுந்த ரேசந் தம்பிரான் செம்பொற் றாளுங்
கனிவரு மாதத் திஞ்சொற் கயற்கணுண் மலர்ப்பொற் றாளும்
பனிவருங் கன்ன ராகிப் பரவித்தம் மிருக்கை புக்கார். (உ௬)

இத்தகு புராணந் தன்னை யெழுதுவோ ரெழுத விப்போர்
வித்தகம் பொருந்தக் கற்போர் கேட்பவர் பொருள்வி ரிப்போ
ரத்தனை பேரு மண்மே லளவிலாப் போகந் துய்த்துச்
சித்தநன் குடைய ராகிச் சிவலோக மருவி வாழ்வார். (உ௭)

நம்பில மான சூளை நன்னகர் வாழ்க மென்பூங்
கொம்பன கயற்க ணம்மை குலவருள் வாழ்க வீம்ப
ரிம்பரேத் தெடுக்குஞ் சுந்த ரேசர்தாள் வாழ்க வன்று
ரம்பலத் தெடுத்த செம்பொ னடித்தலம் வாழ்க வாழ்க. (உ௮)

தலவிசேடப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫௲௬

---

சூளாமாநகர்ப் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

# அரும்பதவுரை.

## கடவுள்வாழ்த்து.

க. ஏகாக்ஷரமொழி இரண்டு-உசு, ரு௪ என்பன; அவற்றுள், ஒன்று முசு; இது குரங்கினுள் ஒரு சாதிப் பெயர். மடங்கல் - நரசிங்கம். ஓமெனு குஞ்சரம் - பிரணவ குஞ்சரம். அப் பிடி - சத்திப்பிரணவமாகிய பெண் யானை.

ரு. வதரி - இலந்தை மரம். இச் செய்யுளிற் சோமசுந்தரக்கடவுள் மதுரையிலிருந்து சங்கப்புலவர்க்காக இத்தலத்திற்கு எழுந்தருளி காட்சி கொடுத்தமை கூறப்பட்டது. இதனைச் சங்கப்புலவர்பூசித்த படலத்தா லுணர்க.

சு. மயற்கண் அம்மையும் வீழ்ந்து; அம்மை - வருபிறப்பு. செயற்கணங்களைச் சற்றுமியினும் மை அருவகை செய்து. பெயற்கு அன்றுமின்ற நம்மையும்.

ௗ. சடையமர் மடநலாள் - கங்கை. இடையமர் புலி - புலித்தோல்.

எ. மற்றுறை உது - உணர்தல். பசு- ஆன்மாக்கள்.

அ. மன் - அசைநிலை. திதித்திடு- காத்தருளுகின்ற.

ௐ. கருதலாய மானம் - அனுமானப்பிரமாணம்.

கக. குரவு - ஆசிரியத்தன்மை. குரல் - பிரம்பு.

கஉ. "அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல், பிறவினை யெல்லாந் தரும்" என்பது திருக்குறள், ௲உக.

கரு. அணைனப்பட்ட பெண்ணை- அண்பனை. பெண்ணேயாக - பெண் பனையாக.

கச. குழிந்த பானை. சொண்ட விரதம் குலைத்து - தாம் சொண்டிருந்த சைனமதத்திற்குரிய விரதங்களை ஒழித்து.

கசு. ஆக்குவித்தோன் முதலியோர் சிவபெருமானொருவரேயாக; பாக்கு - வினையெச்சவிகுதி.

கஎ. மருங்கின் ஆதரம்.

கஅ. அவை - அத்திமைகளை.

உக. துணைத்து-ஒன்றை ஒன்று ஒத்து. ஆனா, ஐ - சாரியை.

## ஆக்குவித்தோர்.

உ. காரையம்பதி - காரைக்குடி

ரு. தளி - கோயில். விளர் - அறியாமை.

## அவையடக்கம்.

த. விசயாலயன் - பொன்னன விசயாலயனென்னும் சிற்றரசன். சூரனும் விசயாலயனும் பூசித்ததை இந்நூலுட் பின்னர்க் காண்க.

உ. என்பாடல் குணமாய்க் குணமும் குற்றமுமாய்க் குற்றமாய் மருவிடுமேனும். முற்காட்டு - முன்பு எடுத்துக் காட்டிய பிறை, அரவு, விடமென்பன.

## சிறப்புப்பாயிரம்.

௧. துமித்தல் - அறுத்தல். | ௨. கழனியம்பதி - சோழிலூர்.

## திருநாட்டுப்படலம்.

௨. கொடுங்குன்றம்-பிரான்மலை.

௩. கைக்குறைத்தோன் - ஒருபாண்டியன்; இவன், தன் கையைக் குறைத்துக்கொண்ட கதையைச் சிலம்பதிகாரம், கட்டுரைகாதையாலுணர்க.

௪. சீர் நறை - சீராகிய தேன்.

௫. இச்செய்யுளில் ௭௩௨, ௭௩௪-ம் திருக்குறளின் கருத்துக்கள் முறையே அமைந்திருத்தல் காண்க. நக்க - விளங்கிய.

௬. முல்லை-முல்லைநிலம். கானம்-காண்டுத்தொகுதி. பூவை-காயாமரம்.

௭. வெறுத்த - மிக்க. மாதவன் - அகத்தியர்.

௮. தடித்து - மின்னல். அறல் - நீர். தோற்றிட - தோன்றும்படி செய்ய.

௧௦. வேந்தன் - இந்திரன்; பாண்டியனுமாம்.

௧௧. வெளிக் கங்கை - ஆகாயகங்கை. மலயம் - பொதியின்மலை.

௧௨. பறம்பு - மலை. சீர் - புகழ். பிரதாபம் - வீரத்தாலுண்டாகியபுகழ். செம்மணி பிரதாபத்திற்கும் வெள்ளருவி புகழிற்கும் உவமைகள்.

௧௩. குங்குமம் - ஒருவகை மரம். மிகை - அதிகம். துணையும் - ஒக்கும்.

௧௪. நொடித்தல் - சொல்லுதல்.

௧௫. கருவி - கூட்டம். இருவினைத்தினி. பொருநை - தாம்பிரபன்னிநதி.

௧௭. நரலை - கடல். பாடு - பக்கம் ஈர்த்தமாநதி - வைகைநதி.

௧௮. கழனிவாயில் - சோழிலூர். மீறுதல் - மிகுதல்.

௨௦. பூரிகு - பனிமரங்கள். பணி - பாம்புபோல் ... வைக்கோற்புரிகள். ... - ... ஓ-மதகு நீர் தாங்கும் பலகை.

௨௧. ... பார் ... ஆதி நன்னூல் பூமியாகிய தேனை நடத்திய சிவபெருமான் அருளிச்செய்த வேதாகமங்கள். உதக்கு - வடக்கு. முன் திசை - கிழக்கு.

௨௫. வன்காலர் - வலிய காலையுடைய உழவர், வலிய கூற்றுவர். கடா முதலியவற்றை இருதிறத்தார்க்கும் அடைகளாக்குக.

௨௬. கான் ஆதி - காடு முதலியவற்றில்.

௨௭. கங்கு - வரம்பின்பக்கம்.

௨௮. பாசம் - கயிறு, ஆணவம் முதலியவைகள்.

௨௯. வயல்கள் தழைதர - வயல்கள் தழைக்க.

௩௨. கழகம் - கல்விச்சாலை. பள்ளிக்கணக்கர் - மாணுக்கர்.

௩௩. தள்ளிய - தள்ள.

௩௪. கனை கனை பருவம் - கிளைகளைக் கனையும் பருவம். புரி - கயிறு. திரைத்து - சுருட்டி.

௩௫. மருவலர் - மணத்தையுடையபூ, பகைவர்.

௩௬. பூ - பூமி, மலர்.

௩௭. தண்டல் - நீங்குதல்.

௩௮. சுகம் - கிளி.

௩௯. கமலராசி - தாமரைமலரின் கூட்டம். குலை - கரை. ஆய - ஆயின.

௪௧. நகப்படை - நகங்களாகிய ஆயுதம், சிங்கம், புலி. சிங்கத்திற்கு நகாயுதமென்று ஒரு பெயருண்டு. ஆம்பல் - ஆம்பற்பூ, யானை. தாமரை - தாமரைப்பூ, தாவுகின்ற மரை யென்னும் விலங்கு.

௪௫. அவாய் - விரும்பி.

௪௭. நார் - அன்பு.

௪௮. வைப்பொடி - கூளம்.

௫௦. கந்து - கமுகமரம்.

௫௧. இதை - புதுக்கொல்லை.

௫௨. இசும்பு - வழுக்கல். ஒப்புதல் - ஓட்டுதல்.

௫௩. குடஞ்சுட்டுகள் - பசுக்கள்.
௫௪. கொன்றை வேய்ங்குழல் - கொன்றைப் பூவைச்செருகியமூங்கிற் குழல்.
௫௫. திமில் - மீன்படகு.
௫௬. கோடு - கரை. மாடு - பக்கம்.
௫௭. உகுத்து இதஞ்செய்வ.
௫௮. நாமம், நாம்-அச்சம்; அம்-சாரியை. கொற்றி - துர்க்கை.

திருநகரப்படலம்.

௨. சோ - மதில்.
௩. முன்னிய-முன்ன. தவமுயல் தவம்-தவஞ்செய்தற்குக் காரணமான தவம்.
௭. சிவபெருமானருளால் நாரை முத்திபெற்றதைத் திருவிளையாடற்புராணத்தாலுணர்க.
௮. குரண்ட ராசி - கொக்கின் கூட்டம். கொக்குவடிவமுள்ள பகாசுரனென்பவன் பகைமையுற்றுச் சிவபிரானாற் கொல்லப்பட்டானென்பது புராணகதை.
௧௨. இயற்பெயர் மீனமென்பது. தாம் விதத்தின் - தாவுகின்ற விதம் போல.
௧௪. நாவலர் - சங்கப்புலவர்.
௧௬. காளிந்திநதி - யமுனாநதி. இதில் தாமரைப் பூவின்மேல் அம்பிகை சங்கவடிவங்கொண்டெழுந்தருளியிருந்ததைக் கந்தபுராணத்தாலுணர்க.
௧௭. குமா - முழக்கம். புரை எறி - குற்றத்தை நீக்கிய. இரு நிதி - சங்கநிதி, பதுமநிதி.
௧௮. ஆரிய - நுகர்தற்கு.
௧௯. உள்ளிய - நினைக்க. கவி - "பிறந்தமிறப்பால்" என்னும் வெண்பா. இதனை இப்புத்தகத்தில் ௬௦-ம் பக்கத்திற் காண்க. ஓதிவிட்டவன் - பொன்னுஞ்ச விசயாலயதேவன்.
௨௦. தடம் - ஈண்டுச் சூரியதீர்த்தம். நாயகன் - சூரியன். இத்தீர்த்தக்கரையிற் சூரியனுக்குக் கோயிலுள்ளது; சூரியன்பூசித்தபடலத்தாலுணர்க.
௨௩. மழையர் - கள்விற்போர்.
௨௪. கால் - காற்று.
௨௬. அம் கிளிரும் காதல்செய்.
௨௭. புனைந்திடும் கால்கள், பரிகால்கள்; பரித்தல் - தாங்குதல். பரிப டும் - வருத்தம் நீங்கிய.
௨௮. கல் - நடுகல்; போரிலிறந்த வீரருடைய பெயரை ஒருகல்லிலே எழுதி அதைநட்டு அவனாகப்பாவித்துத் துதிபட்டுவருதல் மரபு; இதனைப்புறப்பொருளிலக்கண முதலியவற்றாலுணர்க. கல்லூரி - கல்விச்சாலை.
௨௯. கணை - கணையாலாகிய புண். பின்னுள்ள அயில் முதலியவற்றிற்கும் இங்ஙனமே பொருள்கொள்க. கழுக்கடை - சூலம். வசி - வாள், உலவை - கொம்பு. எஃகம் - சக்கரம். நிறம் - மார்பு.
௩௦. எய்த்திடாது - இளையாமல்.
௩௧. சோமசுந்தரக்கடவுள் எழுகடலையும் அழைத்தருளியது ஈண்டு அறியற்பாலது. இஞ்சி - மதில்.
௩௨. பெலிவரை - மேருவரை.
௩௪. கோட்டுநூறு-சங்கின் சுண்ணம். இறுத்தது - தங்கியது. நயக்கும் - ஒக்கும்.
௩௮. மட்டு - அளவு. மாதிரம் - திசை.
௪௪. உபசரித்து அல்லால் - உபசரித்தாலன்றி. வார்தெரு - நீண்டதெரு.
௪௫. மலைதரா - மாறுபடாத.
௪௬. மயங்கும்செய்கைஇல்லாத.
௪௮. துணங்கறல் - இருள்.
௫௦. வானர் - தேவர்.
௫௧. பூதி - விபூதி. மும்மலங்களைக் காதி; காதி - கெடுத்து.
௫௨. பாகு - குழம்பு.
௫௩. சோமசுந்தரக்கடவுள் தண்ணீர்ப்பந்தர் வைத்தருளிய திருவிளையாடல் ஈண்டு உணரற்பாலது. காணி - உரியது. பாணி - நீர்.
௫௪. நான்மார்க்கமாவன: சரியைமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கமென்பன. ஓது அமார்க்கம்.

௩எ. கண்ணிறைந்த பெருமாளென்பது - இத்தலத்திலுள்ள திருமாலின் திருநாமம்.

௩அ. சோமூன்றும் - மும்மதிலும். படர்ந்து - நினைந்து.

௩௯. உதவிசெய்பாக்கு - உதவி செய்யும்பொருட்டு.

௪௧. தெவ்வுவான் - கொள்ளும் பொருட்டு. தெவ்வும் - பகையும். கண்டகம் - முள்.

௪௨. அன்றுமிற்றலின் - அறுகுதலால்.

## நைமிசவனப்படலம்.

௧. வருக்கை - பலா. தூம் கனிகள் - தூவுகின்ற பழங்கள்.

௩. இச் செய்யுள், நைமிசத்திற் பறையின்மையைப் புலப்படுத்துகிறது.

௪. அீற்புஅகம், அகம்-மனம். அது-அமுதம் பெறுதற்குச் சுவர்க்கம்செல்லுதல். எண்மையதோ - எளியதா.

௫. மஞ்சு - அழகு. நனைப்ப - நனைப்பார்கள், நனைப்பன. தஞ்சு-பற்றுக்கோடு. மாக்குலம் - விலங்கின் கூட்டம்.

௬. கோதம் - குரோதம்.

௭. கறையடி - உரல்போன்றஅடி.

௮. தூயவன் - சிவபெருமான். இதழி - கொன்றைமரம்.

௯. யாத்து - கட்டி. படர்ந்து - தியானித்து.

௧௦. உழை - மான். அறுபகை அறுபகையாகிய - காமமுதலிய ஆறனையும்வென்ற; இது, முனிவர்கள் சிவஸாரூபம் பெறுவதைப் புலப்படுத்தியது.

௧௩. தளைத்து - கட்டி.

௧௧. தள்ளிய இருவினையான் - இருவினைகளையும் விலக்கியவன்.

௨௦. வாதராயணன்-வியாஸமுனிவர். மாணவகர் - மாணாக்கர்.

௨௨. ஓவரும் உவகை - நீக்கமில்லாத மகிழ்ச்சி. தா - கேடு.

௨௫. புத்தி - போகம்.

௨௬. மிறை - நடுக்கம்.

௩௨. உதீசித்திக்கு - வடதிசை.

௩௩. இரண்டுபுள் - அன்னமும் கருடனும். மயூரம் - மயில். இளஞ்சேய் - முருகக்கடவுள். மயூரவெற்பு-குன்றக்குடி. குணக்கு - கிழக்கு. முன்னொருகாலத்தில் பிரமதேவருடைய வாகனமாகிய அன்னத்தையும் திருமாலின் வாகனமாகிய கருடனையும் விழுங்கி, முருகக்கடவுளால் 'கல்வடிவமாக' எனச் சபிக்கப்பெற்ற மயில் ஈண்டுவந்து மலை வடிவங்கொண்டு பன்னாட்கிடந்து முருகக்கடவுள் தன்பால் எழுந்தருள, அச்சாபம் நீங்கப்பெற்றதென்பது மயூரகிரிபுராணக்கதை.

௩௪. சத்தியகிரி - திருமெய்யம்.

௩௫. வீணாவனம் - சாக்கை.

௩௬. பனித்த - குளிர்ந்த. மனித்தரின் - மனிதர்போல.

௩௮. தொன்று-பழைமை. அன்று உனா - விரோதித்தசெயல்.

## சூரியன்பூசித்தபடலம்.

௧. நண்ணிய கருதி - நண்ணநினைந்து.

௨. புனைந்து - அலங்கரித்து. அசழ்தரு - பெயர்ந்த.

௩. சபித்தும் - சபிப்பேம். த்திலூரன் - சந்திரன்.

௪. ஓர் பூங்கொடியென்றது உரோகிணியை.

௫. ஸிநி - கீர்ணை.

௭. இரத்தம் - சங்கிப.

௯. வாழிய - அசைநிலை. ஆழிய அழ்ந்த.

௧௦. விது - சந்திரன். மஞ்சனை - அழகனை.

௧௧. கோட்பட்டார் - கொள்ளப்பட்டவர்.

௧௨. அல்பகி - இருள்கெட. மோலி - கிரீடம். பொற்பு அகம் பொலிய.

௧௩. எச்சன் - யாகத்தின் அதி

தேவதை. சச்சம் - அளவு. யாழ்முனி- நாரதர்.

கரு. மகதி - நாரதரது வீணை. வீரன் - வீரபத்திரக்கடவுள்.

கசு. போற்றிய - போற்ற. ஆற்றிய - செய்ய. மாற்றிய - மாற்ற.

கஎ. புலிப்போத்து - ஆண்புலி.

கஅ. பகன் - ஆதித்தர்பன்னிருவருளொருவன்.

கக. சவி - அழகு.

உ0. இன்னணம் - இன்னவண்ணம்.

உக. சான்று - ஸாக்ஷி.

உஉ. எண்வகை உடம்பு - அஷ்டமூர்த்தம். கயமை - கீழ்மை.

உங. சிதம்பு - கீழ்மை. நிலாவிற்கு - சந்திரனுக்கு.

உச. நன்று - இகழ்ச்சிக் குறிப்பு.

உரு. சமழ்ப்பு - நாணம். குழகன் - பேரழகையுடையவன்.

உஎ. இழுதையேன் - அறிவில்லாதேன்.

உஅ. சிகை-தீக்கொழுந்து. நகை- ஒளி, பல். முகை - அரும்பு.

உக. கரிசு - குற்றம். வெறி - வாசனை. மிலேச்சிய - சூடிய.

ஙஉ. மாயக்கோல் - திருமாலாகிய அம்பு.

ஙக. சேழ் - நிறம். வம்பு - புதுமை. ஓங்கல் - மலை. நம்பு-விருப்பம். பம்புதல் - பரவுதல்.

ஙங. கொங்கு - வாசனை.

ஙசு. அழலோன் திக்கு - தென்கிழக்கு. ஒன்றேனும் இணைய வாராது.

ஙஎ. காற்றி - நீக்கி.

ச0. [illegible]லரிய - மிலச.

சக. மற்றையோர்தம்முள் அறியவல்லார் எவர்,

சஉ. தொட்டு - தோண்டி. என்னல் - இகழ்தல். உள்ள - நினைக்க.

சங. ஏதம்-துன்பம்.ஓதம்-கடல்.

சரு. ஒற்றாடை-ஈரம் புலர்த்தும் ஆடை. அதிசுவை - மிக்கசுவை.

சஅ. நந்தும் நந்து - பெருகிய சங்கக்குழையை. நன்றுஉகந்து. கந்துகக்கையோடும் - பந்தையணிந்த திருக்கரத்தையுடைய உமாதேவியாரோடும்.

சக. தள்ளிய சடையாய் - முடிவைத்தள்ளியவரே. தரக்கு அதள் - புலித்தோல். தள்ளிய - பொருந்திய.

ரு0. மாட்டி - மாளச்செய்து. தளைத்து நின்று அடர்க்கும் மலம் - கட்டிநின்று வருத்துகின்ற மலம்.

ருங. வித்தகம் - ஞானம். ஒத்து அகம் உவப்ப.

ருச. ஆழி - தேருருளை. வாழி - அசைநிலை.

ருசு. பொன்றல் இல் - அழிவில்லாத,

ருஎ. உவாமதி - பூரணசந்திரன். குவால் - குவியல்.

ருஅ. எரிமருள்-நெருப்பைப்போன்ற. தோம் என் உடையவர் - குற்றம் யாதுடையவர்; குற்றமில்லாதவரென்றபடி.

ருக. சிவணுக - கலப்பீராக.

சுஉ. எள் - எள்.

சுங. அந்தை - அசந்தை. அதான்று - அஃதல்லாமல்.

சுஎ. அணங்கு - பேய். வெறுழ் - வலி.

சுக. தென்புலத்தவர் - பிதிரர்.

எ0. சந்தம் - அழகு.

சூரன்பூசித்தபடலம்.

க. மன்முதல்மூன்று - மனம் வாக்குக் காயம். பக்க - பக.

ரு. அரணம் - கோட்டை முதலிய காவலிடங்கள். கருவி - ஆயுதம்.

சு. மானம் - அளவு,

[illegible]. அலகு - தூடைப்பம்.

ச0 நானம் - கஸ்தூரி.

எ. கரந்து ஒளித்து. வடி - கூர்மை. உரம் - மார்பு. தெவ்வை - பகையை=சூரன்முதலியவர்களை.

க. வணங்கி [illegible].

க0. [illegible]திண்மை. அமர்த்தினான் - சண்டை செய்தான்.

௪௪. பொன் - சூரியன்.

௪௨. சொற்றம் - வெற்றி. பொற்ற - பொலிவுபெற்ற. அற்றம் - சோர்வு. அடுதல் - போர்செய்தல்.

௪௩. சன்ற அமைந்து. துருவி - தேடி. சூர் - சூரன்.

௪௪. இரிந்தான் - கெட்டோடினன்.

௪௫. சொன், உம், மற்று - அசை நிலைகள்.

௪௬. மூன்றும் உரும்படி அருளிப் பெற. உசவும் - உய்யுவார்.

௨௦. பரிதி - சூரியன். குழல் - இடம். அவண் - அவ்விடம்.

௨௧. உயங்குதல் - வருந்துதல். குமரப்புத்தேள் மற்றமோரிடத்தை யுற்குன். பயம் - பிரயோசனம்.

௨௨. புலவர் - தேவர். நலவர் - நன்மையையுடையவர், பல் நாவலவர். கலவர் - கீழ்மக்கள். கடிவரல் - விரைந்துவருதல்.

௨௪. தன்னன்மைதரும்.

௨௫. நாதித்த - முழங்கிய.

௨௬. கூவிளம்-வில்வம். மருந்து - அமிர்தம். முகமன் - உபசாரம். துழாய்க்கோல் - திருத்துழாயையணிந்த திருமாலாகிய அம்பு.

௨௮. கோட்டி - வளைத்து. வியாளம் - பாம்பு.

௨௯. பார் அமை தேர - பூமியாக அமைந்த தேரையுடையீர். நாரா அமை ஆர - மாலையாக அமைந்த ஆத்தியையுடையீர்.

௩௦. உகிர் - நகம். காளம்-விடம். தேர்வு அரு - ஆராய்தற்கரிய. உத்தூளம் - பூச்சு. மொய் - வலி.

௩௧. அபிராமம்-பேரழகு. சம்மியயானம். வாமம் - இடப்பக்கம். ஏமம் - இன்பம். யாமம் - நள்ளிரா.

௩௩. வேட்டது என் - விரும்பியது யாது.

௩௫. வந்து ஐயா.

௩௬. போதி - போவாய்.

௩௭. போது இல்லான் - பிரமன். ஏதிலாள் - அயலான். மகிழ்ச்சி எய்தினன் - மகிழ்ச்சியை அடைந்தனன்.

௩௮. தநு - வில்.

௪௧. மாவாய் - மாமரமாய். கீளப்பட்டு-கிழிக்கப்பட்டு. இருபுள்ளாய்-கோழியும் மயிலுமாகி.

## பொன்னுன விசயாலயதேவர் திருப்பணிப்படலம்.

௪. பசை - அன்பு.

௨. விராம் - விராவும். அன்மி - அடைந்து.

௩. குறுநிலமன்னர் - சிற்றரசர். முறுவல் - சிரிப்பு.

௭. மந்திர உருவன் - சிவபெருமான்.

௯. சுடுச்சைத் தாரு - கொன்றை மரம்.

௧௦. பலாசு - புரசமரம். துணைவது - ஒப்பது.

௧௧. மாலாய பயோதர ஊர்தி - திருமாலாகிய மேகவாகனம். எறு - இடபம்.

௧௨. வளி - காற்று. விசயன் - அருச்சுனன்.

௧௫. முன்னம் - முன்.

௧௭. வாரிசம் - தாமரை.

௧௮. குரு - நிறம்.

௧௯. சூழ்வான் - ஆராய்வான்.

௨௦. துனைந்து - விரைந்து. சிவக்குறி - சிவலிங்கம்.

௨௧. வல்லே - விரைவு. அண்டர் - தேவர்.

௨௨. சயம்பு-தானேதோன்றியது.

௨௩. அரு - அருவம். மாணமாட்சிமைப்பட. வாளா - சும்மா.

௨௫. தடப்பால்-தடாகத்தின்பக்கத்தே.

௨௬. திருக்கு - மாறுபாடு. மருகையாத - மணம் நீங்காத.

௨௭. ஆத்தன் - சிவபெருமான்.

௨௮. அரவு சூடி-சிவபெருமான். புரவு - காத்தல். கரவு - கள்ளம்.

௨௯. மன்றுயிர் அளவில் சுகடுறுதலே.

௩௩. அசழ்ந்துபோசுகி - தோண்டியெறிந்து. இசை - கீர்த்தி.

௩௯. பாவுதல் - பரவுதல். ஒவு கவலை உடையானாய் - கவலையில்லாத வனாகி; ஓவுதல் - ஒழிதல்.

௪௦. ...வியிம் - கோடாரி. குயம் - அரிவாள். அடவி - காடு. எறிந்து - வெட்டி.

௪௧. சிற்பம் - சிற்பநூல். பொற்ப - அழகுபொருந்த. நிற்ப - தூண் முதலியவைகள். இடப்ப - விட்டம் முதலியவைகள்.

௪௨. ஆன்ற - அமைந்த.

௪௩. அழா - அழ்ந்த.

௪௪. மறுகு - வீதி. பிறங்க - விளங்க.

௪௫. மூவா - அழியாத.

௪௬. நார் - அன்பு.

௪௭. எய்ய - அறிய.

௫௦. குரோசம் - நீட்டலளவைக ளுளொன்று.

௫௧. மதனால்வருந்தான் - சிவபெருமான். சென்றருளி வெளிசெய்தான். பதன் - பக்குவம்.

## பொன்னன விசயாலயதேவன் நிருத்த தரிசனஞ்செய்தபடலம்.

௪. அதிரா - நடுங்கி.

௫. நிலவு ஆதரம்.

௬. என்னார் - பகைவர்.

௭. செந்தாமரைக்கண்ணூர் - பிரமதேவரும் திருமாலும்; கண் - இடம், விழிகள்.

௮. ஆருயிர் - அருமையான உயிர். முனி - பிள்ளை; என்றது மார்க்கண்டேயனை.

௯. கொம்பு ஆர் - கொம்பையொத்த.

௧௦. சத்து - உண்மை.

௧௧. பரித்தாய் - தாங்கினாய்.

௧௨. நத்தான் - திருமால்; நத்து - சங்கம்.

௧௫. வழுத்து ஆதரம். கரமான் உரி - யானைத்தோல்.

௧௮. திருப்புத்தூரில் ஸ்தலவிருக்ஷம் கொன்றை. சீதளிதீர்த்தம் - அத்தலத்துத் தீர்த்தங்களுள் ஒன்று. இது திருமகளாலுண்டாக்கப்பெற்றது.

௨௨. வெரிந் - முதுகு. மும்மலம் இரிய.

௨௪. மதலை-சொன்றை. அதில் - அச்சொல்லில்; முதல்குறைத்தமாலிகை - தலைமாலை. விதலை-நடுக்கம். முதலை-முதிய அலைகளையுடையகங்கை. அதலை அதலை - அஃதல்லாய் அஃதல்லாய்.

௨௫. துடி - உடுக்கை. உஞற்றி - செய்து.

௨௬. தலைமிசைச்சூடினன்.

௨௭. சுற்று கால் - சுற்றிவருங்காலத்தில். பிணைந்து - விரும்பி.

## சங்கப்புலவர்பூசித்தபடலம்.

௧. சால் - மிகுதி.

௨. ஒருவாது - நீங்காமல். கூறு - அம்சம்.

௩. திருந்தார் - பகைவர். எகிடுமேனும் வருந்தார். தார் - மலர். பிறக்குறுதல் - விளங்கச்செய்தல்.

௫. அன்னோ - ஐயோ.

௬. களிநனிதரும்.

௭. கனம் - கூட்டம்.

௮. உருப்படம் - உட்டினம்.

௯. தளம் - இலிதழ். குளம் - நெற்றி. கோமளம் - அழகு.

௧௦. வையும் உண் விடை - திருமாலாகியவிடை. விதி - பிரமன்.

௧௧. ஆடகம்-பொன். அன்புஉள்ளம். பாணி - தாளம். பூணி - இடபம் காடகத்தூணி - முல்லைநிலமாகிய அம்பறாத்தூணி; திருமால் அம்பாதலின், அவருக்கு இருப்பிடமாகிய முல்லைநிலம் தூணியாகக்கூறப்பட்டது. தோணி - அம்பு.

௧௨. மந்தணம்-ரஹஸ்யம். போதம் - ஞானம்.

௧௩. மறைக்காடு-வேதாரணியம்.

௧௪. கரு பிறவி. வெரூ - அச்சம்.

௧௫. வித்தகம் - திறமை. பிறிதேதாதலின், "மாயேனைச்சித்தம்வைத்து அவாவிச்சேருந்தேனை" என்றார்.

கஎ. நீலி - நீலநிறமுடைய உமா தேவியார். வாலியாள் - தூய்மையையுடையவள்.

கஅ. அலம் - விடம். அக்கமார் பாலம்-கண்பொருந்தியநெற்றி. களம்-கழுத்து.

ககூ. வேயில் - மூங்கிலாகியவீடு. ஞாயில்-மதில்; என்றது திரிபுரங்களை. பருப்பதம் பாய் ... - பருப்பதத்திற் பாய்ந்துவிளையாடுகின்ற மனைவி.

உ௦. தெய்வஆ-காமதேனு. உவாவை-பூரணப்பொருளை. முருந்துகூறப் பட்டமையின், முற்கூறியதலம் திருப்பெருந்துறையென்றுகொள்க.

உக. தேசு - ஒளி. தூசு - ஆடை. தழல் ஆசம் - தீயையுண்டாக்கும் சிரிப்பு.

உஉ. முடியின்மேல்ஆரானை, ஆர்-ஆத்தி. நக்கு ஆர்த்து ஆனையையுரித்த. வையம்-தேர். பற்றார் - பகைவர். கானப்பேர் - காளையார்கோயில்.

உங. தொன்றை வாசத்தையும் தடம் ... விசு. அளி-அன்பு. அள்ளிவிழுங்கும்.

உச. வார - ஒழுக.

உரு. புறப்பொருள் - புறப்பொருளிலக்கணம். அது புகழ்ந்தனர்பரவலென்னுந்துறை.

உஎ. இறை - சிவபெருமான். படுப்பு - விரைவு. புத்தியென்பது பெரியோரேவுங்காற் சிறியோர்கூறும் உடன்பாட்டுக் குறிப்புமொழி.

ஙக. நக்கு - சிரித்து.

ஙஉ. இன்னே இப்பொழுதே.

ஙங. நாயன் - தலைவன். நலக்க- அழகுபெற.

ஙச. 'கருத்துணராக்கூற்று' என்பதன்முனே 'யாம்கூறியசொல்' என்பதனை வருவிக்க.

ஙஅ. இணர் - பூங்கொத்து.

ஙகூ. புணரி-கடல். முழைகு-ஆறு.

ச௦. வலர் - வல்லவர். நலர் - நல்லோர்.

சக. கலவைப் - கலந்த. மதுப் பொய்கை ... கோயிலூரிலுள்ள தீர்த்தத்தின்பெயர்.

சஉ. உலப்பரிய பூணுகையென்னைக் கொண்டவர். நன்புலம் - நன்செய்.

சங. முருக்கி - அழித்து. செழுவிய - செழித்த.

சசு. அடை - இலை.

சஎ. பனிதம் - கருப்பூரம்.

சஅ. போற்று - துதித்தல்.

சகூ. வசதி - வீடு. கன்னிய - கருதிய.

ரு௦. கப்புரம்-பச்சைக்கருப்பூரம். ஒருங்கு - ஒருமிக்க.

ருக. கலிங்கம் - ஆடை. பிறன் செய்மென்றுகில் - பீதாம்பரம். மதாணி - பதக்கம். ஆழி - மோதிரம். குழை - குண்டலம்.

ருஉ. மாவலன் - குதிரைவீரன். வழுதி - பாண்டியன்.

ருச. சடிலமோலி-சடாமகுடம்,

ருரு. கனக சஞ்ச வாவி - பொற்றாமரைத்தீர்த்தம்.

ருசு. சரு - தேவருணவு.

ருஎ. புவனம் - நீர்; என்றது ஆகாயகங்கையை. புவன உரு கூடு - புவனங்களினுருவமாகிய கூடுகளை.

ருஅ. பாலன் - மார்க்கண்டேயர். உரும் - இடி. கடாப்பகடு - எருமைக்கடா. மறலி - இயமன்.

ருகூ. வண்டு நிறீஇ - வண்டுகளாகிய நாணை நிறுத்தி. கழை - கரும்பு.

சு௦. கருத்து அலர்த்தி. அருத்தி-ஆசை.

சுஉ. தாவாத - கெடாத. ஆவா - ஐயோ, குறள் - குண்டோதரன். தேவாதிதேவன் - தேவர்களுக்கு ஆதியாகிய தேவன்; மகாதேவனென்றபடி.

சுங. பாலொலி-பரவிய ஒலி. எ- அம்பு. தே - இடபம்.

சுச. பகர்ந்து - விற்று.

சுசு. சேல் கெழுகண்.

சுஎ. பொறித்து- எழுதி. முகிழ்ப்ப - தோன்ற.

சுஅ. மாதுலனை - மாமனை.

சுகூ. குழவு கேழிகள் - பன்றிக்குட்டிகள்.

எ௦. தன்னுடைய பேரம்புகுந்த ரப்பேரம்பு. ...

கலிநீம் - பிணக்கு. தென் - அழகு.

எக. புலர்ந்த - வாடிய. இசம் - இவ்வுலகு. இந்திரமானம் - இந்திரவிமானம்.

எச. கந்தமார்குழல் - உமாதேவியார்.

எடு. குரு விழாவகை - அழகு கெடாத விதம்.

எகூ. இராப்பொழுது மிக நீண்டு தோன்றியதென்பார், 'விடிவுணரார்' என்றார்.

எஅ. நென்னல் - நேற்று.

எகூ. அக்குமணி-உருத்திராக்ஷம்.

அ0. வடி - தேன்.

அ௩. மாலாத-மயங்காத. ஏலாத-ஏற்றுக்கொள்ளத்தகாத தீக்குணங்களை. சூலாத - பிறரால் தோண்டி எடுக்கப்படாத. குன்று-தோண்டி. தோலாத - தோல்வியடையாத.

அச. தலைப்பட்டு - கலந்து. உணர்வான் - உணரும்பொருட்டு. அதுலமாய - ஒப்பில்லாததாகிய.

அடு. கசடு - குற்றம்.

அகூ. இல்லாதவற்றை. நீற்றி-நீருக்கி.

அஎ. தொன்று - பழமை.

அஅ. ஒன்றும் - சிறிதும்.

அகூ. எல்உலவா - ஒளிகெடாத. அல்உலவாக்கண்டத்தார்.நீலகண்டர்.

கூ0. புரைஆருயிரும் உயல் உற - குற்றத்தையுடைய அரிய உயிரும்பிழைத்தலுற.

கூக. மயற்கு அன்னாள். அயற்கண்ணாள் அலளாகி - வேறிடத்திலுள்ளாளல்லளாகி. செயலாகிய என்னை.

கூ௩. இரண்டு-பொற்றாமரையும், கடம்பும். தாமம்-கொன்றை, மாலை; சடை-சடை, பின்னல்.

கூச. கண்ணவர்கள்-கருதுதலையுடையவர்கள்.

கூகூ. தரமோ - தகுதியோ.

க00. நாஅணி - நாவால் அலங்கரிக்கும். மரீஅணிபின் - மிக்கஅலங்காரத்தோடும்.

## திருமால் பூசித்தபடலம்.

உ. ஐய - அழகிய.

௩. வீரை - கடல்.

டு. குருஉச்சுடர் ஆலும்-நிறம்பொருந்திய ஒளிமிக்க.

சு. வன்னம் - எழுத்து.

கூ. செற்றம் - தணியாக்கோபம். குடந்தம்பட்டு - வணங்கி.

க0. பூணி-கை, மாந்தும்-உண்ட. பாலலோசனன் நெற்றிக்கண்ண.

கக. பவனென்பது சிவபெருமான்திருநாமங்களுளொன்று. கழுது - பேய்.

க௨. மத்தம் - ஊமத்தை.

க௩. கன்னல் - கருதுதல். உன்கழலன்றிக் கன்னல் ஏதுமிலேன். பின்னுமிப்படியே சொள்க.

கடு. பின்னர் இஃது ஆற்றினன்.

ககூ. சேய - சிவந்த. பதிட்டை - பிரதிஷ்டை. ஆவயின் - அவ்விடத்தே.

கஎ. விணவிண்டுபோக, விண்டு - விஷ்ணு.

கஅ. பன்னம் - இலை. சொன்ன ஆடை - பீதாம்பரம்.

ககூ. கந்தம் - மணம்.

௨௨. சந்தம்-அழகு. நந்து-சங்கு,

௨ச. ஈத்து-கொடுத்து. கன்று - பசுக்கன்று. கனி - விளாங்கனி.

௨டு. பின்னை - திருமகள்.

௨கூ. குணில் - குறுந்தடி.

## தலவிசேடப்படலம்.

௧. பன்னிய-சொல்லிய. பருப்பதம் - ஸ்ரீசைலம்.

௨. என்னரும் - யாவரும்.

௩. காந்தாரம் - [illegible]சம்.

ச. மனை - மனைவி. களங்கம் - குற்றம்.

அ. விளையுள் - விளைதல். வலம் - வெற்றி.

க௬. நாங்கள் தம்பெருமான். பங்கம் இன்று - குற்றமில்லாமல்.

கஎ. அருகுறு - குறையாத. திரு - செல்வம்.

கஅ. விராய - கலந்த. பூமேற்பனவன் - பிரமன்.

க௯. விலம் - பழுது.

உ0. தொக்க - கூடிய.

உஉ. அலரி - சூரியன். பன்னகம் - பாம்பு. நன்னர் - நன்மை.

உ௩. சொல் - புகழ்.

உ௫. புரைத்த - உயர்ந்த.

உ௬. பனிவருங்கண்ணர் - துளிக்கும் கண்ணர். பரவி - துதித்து.

உஅ. உம்பர் - தேவர்.

## பிழையும் திருத்தமும்.

| பதிகம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| க௫ | ௫ | உ | தவர் | தவ |
| ௪உ | உ0 | க | பன்னரும் | பன்னரு |
| ௪அ | உக | க | கடந்தலை | கடன்றலை |
| ௫௰க | ௪௩ | உ | யழா | யேழா |